# மதுரை மூதூர்





பண்டித சு. வே. நடராசன்,
எம். ஏ., பி. ஓ. எல்.

# மதுரை மூதூர்



ஆசிரியர் :

பண்டித சு. வே. நடராசன், எம்.ஏ.,பி.ஓ.எல்.

தமிழ்த்துறை

ச. வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி,

நாகமலை, மதுரை.



பூமகள் பதிப்பகம்,

நாகர்கோவில்.



[விலை ரூ. 2-00

# முன்னுரை

பழங் காலப் புகழோடு இன்றும் பெருமையிற சிறந்து விளங்கும் மதுரை மூதூர் தமிழ் நாட்டில் இரண்டாவது பெரிய மாநகராகத் திகழுகின்றது. இம்மூதூரைக் குறித்து மாணவருலகம் நன்கு அறிந்து கொள்வது சிறப்புடையதாகும் என்று கருதினேன். அவ்வெண்ணத்தின் முதிர்ச்சியே இந் நூலாக வெளிவருகின்றது.

இந்நூலில் செய்திகள் நிரல்பட அமைக்கப்பட்டு, அவை சுவை மிக்க இனிய தமிழ் நடையில் எழுதப் பெற்றுள்ளன. இலக்கிய வளர்ச்சி பெருகி வரும் இந்நாளில், சிறந்த இலக்கியங்கள் சிலவற்றுள் மதுரை மாநகரினைக் குறித்து விரிவாகக் காணப் பெறும் செய்திகளுள் சில சுருக்கமாகத் தரப்பட் டுள்ளன. பன்னாட்டுக் கலை வல்லுநரும் பாராட்டிப் புகழும் சிற்பக் கலைக் கோவிலாக இலங்கும் மீனாட்சி யம்மன் கோவிலைக் குறித்தும் மாணவருலகம் சிறிது தெளிவைப் பெற்றிருப்பது இன்றியமையாததாகும். ஆதலின், அக்கோவில் பற்றிய செய்திகளுள் சில சிறிது விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. பழங்கால மதுரையின் தோற்றச் சிறப்பும், இக்கால மதுரை யின் தோற்றப் பொலிவும் மாணவ மாணவியர்க்கு ஏற்றவாறு கூறப்பெற்றுள்ளன. இந்நூற் செய்திகள் அனைத்தும் அவர்களின் இலக்கியப் பயிற்சிக்கு மிக்க ஊக்கம் அளிப்பனவாகும். மாணவருலகிற்கு இந்நூல் ஓர் அரிய தமிழ் விருந்தாக அமையும் என்று நம்புகின்றேன்.

ஆசிரியன்

# உள்ளுறை

# 1. பழங்காலப் பாண்டிய நாடு

**தமிழகம் :**

ஒப்புயர்வற்ற நம் இந்திய நாட்டின் தென்பால் அமைந்துள்ள பகுதி, இந்நாளில் தமிழ்நாடு என்று வழங்கப்பெற்று வருகின்றது. இது பழங்காலத்தில் தமிழகம் என்றும் வ்ழங்கப்பெற்று வந்தது. புற நானூறு, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், மணி மேகலை போன்ற சங்க இலக்கியங்களில் **தமிழகம்** என்னும் பெயர் அமைந்திருப்பதைக் காணுகின் றோம். இதனைத் தொல்காப்பியம், **'தமிழ் கூறும் நல்லுலகம்'** என்று போற்றுகின்றது.

> "வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத்
> தமிழ் கூறும் நல்லுலகம்"

என்பது தொல்காப்பியப் பாயிரமாகும்.

இத்தமிழகம் பழங்காலத்தில் சேரநாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என முப்பெரும் பிரிவுகளாக இருந்து வந்தது. இப்பிரிவுகளை ஆட்சி புரிந்துவந்த மன்னர்கள் சேரர், சோழர், பாண்டியர் என்று பெயர் பெற்றனர். சேர சோழ பாண்டிய நாடுகள் பழங்காலத்திலேயே சிறப்புப் பெற்று விளங்கின.

**பாண்டிய நாடு :**

பழங்காலப் பாண்டிய நாடு இக்காலத்துள்ள மதுரை, இராமநாதபுரம், கன்னியாகுமரி மாவட் டங்களையும், புதுக்கோட்டையில் வெள்ளாற்றுக்குத் தெற்கிலுள்ள நிலப்பரப்பையும் கொண்டு விளங்கி

யது. எனவே, பாண்டிய நாட்டிற்குத் தென் வெள்ளாறு வட எல்லேயாகவும், குமரிமுனே தென் எல்லேயாகவும் அமைந்திருந்தன ; வங்கக் கடல் கிழக்கெல்லேயாகவும், திருவாங்கூர், கொச்சியாகிய கேரள மாநிலப் பகுதி மேற்கு எல்லேயாகவும் அமைந்திருந்தன. மதுரை மாநகரம் பாண்டிய நாட்டின் கோநகராகவும், கொற்கை துறைமுகப் பட்டினமாகவும் விளங்கின.

**பாண்டிய நாட்டின் தொன்மை :**

பாண்டிய நாடு படைப்புக் காலந்தொட்டே மேம்பட்டு வந்துள்ளது.

> " வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
> பண்பின் தலேப்பிரித லின்று "

என்னும்குறட்பாவிற்கு உரை வகுத்த பரிமேலழகர், பழங்குடி என்பதற்கு விளக்கங் கூறுகையில், "பழங் குடி என்பது தொன்றுதொட்டு வருகின்ற குடி; சேர சோழ பாண்டியர் என்ருற் போலப் படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வருதல்" என்று உரைத் தருளினர். இதனுல், பாண்டியர்குடி படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல் வெள்ளிடை மலேயென விளங்கும். எனவே, பாண்டிய நாடு படைப்புக் காலந்தொட்டே மேம்பட்டு வந்த நாடு என்பது வெளிப்படை.

வடமொழியாளர் ஆதி காவியம் எனப் பாராட் டும் வான்மீகி இராமாயணத்தில், பாண்டி வேந்த னுடைய தலேநகர் பொன்ஞலும் முத்தாலும் அணி செய்யப் பெற்றிருந்தது என்னும் குறிப்புக் காணக்

கிடக்கின்றது. வியாச முனிவர் இயற்றிய மகா பாரதத்தில், பாண்டவருள் ஒருவனுகிய அருச்சுனன், பாண்டியர் குலப் பெண்மணியை மணந்த செய்தி காணப்படுகின்றது. இலங்கையின் பழங் கால வரலாற்றைக் கூறும் மகாவமிசம் என்னும் வரலாற்று நூல், இலங்கை வேந்தனுகிய விசயன், பாண்டிய மன்னன் மகளை மணந்த செய்தியை அறிவிக்கின்றது. சாணக்கியர் தமது பொருள் நூலில் பாண்டிய நாட்டு முத்தையும், மெல்லிய துகிலையும் பாராட்டிக் கூறியுள்ளார். கி. மு. மூன்ரும் நூற்ருண்டில் சந்திரகுப்த மன்னனுடைய அரசவைக்கு வந்த கிரேக்க நாட்டுத் தூதராகிய மெகஸ்தனீஸ் என்பார், பாண்டிய நாட்டைப் பற்றிக் குறித்திருக்கின்ருர். மகத நாட்டை ஆட்சி புரிந்த மௌரியப் பேரரசராகிய அசோகருடைய கல்வெட்டுக்களிலும் பாண்டிய நாட்டைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. உரோம நாட்டு வரலாற்று ஆசிரியராகிய பிளிநி என்பாரும் பாண்டிய நாட்டைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாற்ருல் பாண்டிய நாட்டின் தொன்மை இனிது உணரப் படும்.

**பாண்டிய நாட்டின் பெருமை :**

பாண்டிய நாடு தொன்றுதொட்டே பெருமை பெற்று விளங்கிய நாடு. முத்தமிழ் மொழியை முறையாக வளர்த்த பெருமை பாண்டிய நாட்டிற்கே உரியது. செந்தமிழ் மொழியின் பிறப்பிடமாகிய பொதிகை மலை, இந்நாட்டிலேயே அமைந்துள்ளது. தமிழ் வையையும், வற்ருது வளங் கொழிக்கும் பொருநையும் இந்நாட்டிலே அமைந்

துள்ளன. கொற்கை முத்துக்கள் உலகப் புகழ் பெற்று விளங்கின. அத்தகைய முத்துக்களை உலகிற்கு அளித்த பெருமை பொருந்திய கொற்கையம்பதியும், இந்நாட்டிலேயே அமைந்திருக்கிறது. இந்நாடு நக்கீரர், கபிலர் போன்றவர்களாகிய புலமைச் செல்வர்களையும், ஒக்கூர் மாசாத்தியார், மாறோக்கத்து நப்பசலையார், அள்ளூர் நன்முல்லையார் போன்ற புலமைச் செல்வியரையும் பெற்றிருந்த பெருமை உடையது.

## இயற்கை அமைப்பு

**குறிஞ்சி நிலம் :**

திருவழுதி நாடு என்று புகழப்பெறும் பாண்டிய நாடு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நில வளனும் ஒருங்கே அமைந்த பெருமை உடையது. அந்நாட்டிலே அமைந்த குறிஞ்சி நிலம் மலை தழுவப் பெற்ற சிறப்பினை உடையது. அது வெள்ளிய அருவி வீழ்வதனால், நீரோடுங் கால்வாய்களை உடைய பக்க மலைகளால் சூழப்பெற்றது. அந்நிலத்தில் தினையிற் படியும் கிளியை ஒட்டும் ஆரவாரமும், அவரைத் தளிரைத் தின்னும் ஆமாவை ஓட்டும் ஆரவாரமும், குறவன் ஆண் பன்றியைக் கொன்றதனால் உண்டான ஆரவாரமும், வேங்கைப்பூவைப் பறிக்கும் மகளிர் புலி, புலி என்று கூறும் ஆரவாரமும், பன்றியைக் கொல்லும் புலியினது ஆரவாரமும் மலையிடத்துப் பொருந்தி எதிரொலியினை எழுப்பும். அங்கே ஐவன வெண்ணெல்லும், தோரை நெல்லும் வளர்ந்திருக்கும்; நெடிய தாளினை உடைய வெண்சிறு

கடுகும் வளர்ந்திருக்கும்; இஞ்சியும், மஞ்சளும், மிளகுக் கொடியும், பிறபண்டங்களும் கற்றரை யிடத்துக் குவிந்து கிடக்கும். இத்தகைய சிறப்பினை உடையது குறிஞ்சி நிலம்.

முல்லை நிலம் :

முல்லை நிலம் ஒளி பொருந்திய பூக்களை உடைய கொன்றை மரங்களின் பரந்த நிழலை உடையது. பாறைகளிலே அரும்புகளையுடைய முசுண்டையின் பூக்களும், வெள்ளியின் நிறத்தை ஒத்த முல்லையின் பூக்களும் உதிர்ந்து கிடக்கும்; கரிய தாளினை உடைய வரகும், எள்ளினது இளங் காயும் முற்றியிருக்கும்; மக்கள் சிறிய தினையினை அறுப்பர்; அந்நிலத்தில் அமைந்த குழிகளிலே மணிகள் கிடந்து விளங்கும் ; நௌவிமான் தன் பிணையுடனே துள்ளித் திரியும்; நீரையுடைய பள்ளங்களிலே நெய்தல் மலர்கள் மலர்ந்து தோன்றும். முல்லை நிலம் இங்ஙனம் சிறப்புடைய தாக விளங்கலாயிற்று.

மருத நிலம் :

யானைத்திரளும் நடுங்கும்படி மேகமானது இடி யோடு கூடிப் பெருமழையினைப் பொழியும். அதனால், கவலைக்கிழங்கு தோண்டிய குழிகளிலே வெள்ளம் வீழ்ந்து அருவிபோன்று ஒலிக்கும்; ஆறுகளிலே வெள்ளம் பெருகி ஓடும்; அவ்வெள்ளம் ஆற்றிடைக் குறைகளில் சென்று முட்டி, குளங்கள் நிரம்பும்படி நீரை நிறைக்கும். குளங்களில் நின்ற நீரின் மிகுதியால், கழனிகளில் யானைகளையும் மறைக்கும்படி ஓங்கி வளர்ந்த கதிர்கள் விளைந்

திருக்கும்; மடுக்களிலும், பொய்கைகளிலும், தாமரைப் பூக்களும், நெய்தற் பூக்களும், நீலப் பூக்களும், ஆம்பற் பூக்களும், பிற பூக்களும் மலர்ந் திருக்கும்.

இத்தகைய இயல்புடைய கழனிகளிலும், மடுக் களிலும், பொய்கைகளிலும், சம்பங்கோழிகளின் உறக்கம் கெடும்படி வள்ளைக்கொடிகளைத் தள்ளிக் கொண்டு வலைஞர் மீனை வாரிக்கொள்வர். அன்னார் மீன்களைக் கொன்று குவிப்பதனால், அங்கே ஓசை எழும். அந்நிலத்தே கரும்பாலையின் ஓசையும், களைபறிப்பார் ஓசையும் எழும்; வயல்களில் தங்கிய கிழஎருதுகளின் வருத்தத்தை நீக்கும் களமரின் ஓசையும், நெல்முற்றிய கழனிகளில் அந்நெல்லை அறுப்போருடைய பறையோசையும் எழும். தண்பரங்குன்றில் விழாக்கொண்டாடும் ஓசையும், மகளிர் தங்கள் கணவரோடு புதுப்புனலாடும் ஓசையும் வானில் சென்று ஒலிக்கும். இவ்வோசை களோடு மீனை அறுக்கும் பாணர் குடியிருப்புக் களில் ஆடல் பாடல்களால் எழும் ஓசையும் சேர்ந்து ஒலிக்கும். மருதநிலம் இத்தகைய சிறப்பினை உடையதாகும்.

**நெய்தல் நிலம் :**

நெய்தல் நிலத்தே உள்ள பரதவர் ஒளியுடைய முத்துக்களையும், சங்க வளைகளையும், மற்றும் கடல் தந்த பல்வகைப் பண்டங்களையும் விலைகூறி விற்பர். அங்குள்ள அணிகலன்கள் போன்ற பொருள்களைக் கொண்டு செல்லும் பொருட்டு யவனம் முதலிய நாட்டவர் குதிரைகள் முதலிய வற்றைக் கொண்டு வருவர். அவர்கள் உப்பங்கழி

களிலே விளைந்த வெள்ளிய உப்பு, கருப்புக்கட்டி கூட்டிப் பொரித்த புளி, கொழுமீன்களைத் துணித்து உப்பிட்டு உலர்த்திய கருவாடு என்னும் இவை களைக் கொண்டு செல்வர். இத்தகைய பல செல்வங் களும் கடல் சார்ந்த நிலத்தில் நெருங்கிக் கிடக்கும்.

பாலை நிலம் :

பாலைநிலத்தில் உள்ள தூறுகளை நெருப்புச் சுட்டெரித்தது. அதனால் யானைகள் மேய்வதற்குத் தக்க இடங்களை நோக்கிச் சென்றன. மலைநிலத்தைச் சார்ந்திருந்த பாலை நிலத்தில் ஊகம்புல் வைக் கோலைப் போன்று காய்ந்திருக்கும். மணல் பரந்த வெளியிடங்களிலே சூறுவளிக்காற்று அடித்தது. அதனால் குன்றமானது காற்று மிகுந்த கடல் ஒலிப்பது போன்ற ஒலியினை உடையதாக விளங் கிற்று. வீரர்கள் ஆறலைக்கள்வர்களால் மக்கட்குத் துன்பங்கள் நேராதவாறு பாதுகாத்துவந்தனர். அவர்கள் இலைகளால் வேயப்பெற்ற குடில்களிலே உறைந்து வந்தனர். அன்னார், வில்லினையும், கடிய சொல்லினையும் உடையவர்; மான்தோலாகிய படுக்கையினையும், தழை விரவிய கண்ணியினையும் உடையவர். அவர்கள் ஆறலைக் கள்வரின் பொருட்டுப் பாலைப் பெருவழிகளிலே இடையறாது திரிந்து கொண்டிருந்தனர். பாலைநிலம் இவ்வியல் பினை உடையதாக விளங்கலாயிற்று. இங்ஙனம் பாண்டியநாடு ஐவகை நிலவளமும் பொருந்தப் பெற்று மாட்சிமை உடையதாகத் திகழ்ந்தது.

---

# 2. பாண்டிய நாட்டு வரலாறு

**பாண்டியர் மரபு :**

பாண்டியர் குடி, படைப்புக் காலந்தொட்டே மேம்பட்டு வந்த குடி என்பது முன்பே கூறப் பெற்றது. எனவே, பாண்டிய நாட்டில் சங்க காலத் துக்கு முன்னரே பாண்டிய மன்னர்களின் ஆட்சி நிலைபெற்றிருந்தமை அறியத்தக்கது. சங்க காலத் துக்கு முன்னரும், சங்ககாலத்தும், இடைக்காலத் தும், பிற்காலத்துமாக ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர் பலராவர். இந்நாட்டில் சோழ வேந்தர், களப்பிரர், முகமதிய மன்னர், விசயநகர வேந்தர், நாயக்க மன்னர் ஆகியோருடைய ஆட்சியும் சில காலங்களில் நிலவியிருந்தது. இவ்வாறு கி. பி. 18ஆம் நூற்றுண்டுவரை பாண்டிய மன்னரின் ஆட்சி நடைபெற்று வந்தது. அந்நூற்றுண்டி லிருந்து பாண்டியர் மரபும் மறைந்து பட்டதாக அறிய இயலுகின்றது.

உலகம் புகழும் கலைக்கோவில்களை எழுப்பித் தமிழகத்தே சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்த சோழர் மரபு, கி. பி. 13 ஆம் நூற்றுண்டோடு மறைந்து விட்டது. செங்குட்டுவன் போன்ற பெரு மன்னர்களைத் தோற்றுவித்த சேரர் பரம்பரையும், சங்க காலத்துக்குப் பின் அறிய முடியாது மறைந்து விட்டதாகவே கருத முடிகின்றது. திருவிதாங்கூர்த் தனியரசில் அண்மைக் காலம்வரை ஆட்சி புரிந்த மன்னர்கள், பண்டைச் சேரர் மரபினைச் சார்ந்தவர் கள் என்று அறிஞர் பெருமக்கள் கருதுகின்றனர்.

சிற்சில காலங்களில் வீழ்ச்சியுற்றும், தாழ்வு அடைந்தும் விளங்கிய பாண்டியர் மரபோ, கி. பி. 18ஆம் நூற்றூண்டுவரை விளங்கியிருந்தது போற்றுதற்குரியது.

**பாண்டியர் ஆட்சி :**

**வடிம்பலம்ப நின்ற பாண்டியன், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி** என்னும் இருவரும் சங்க காலத்துக்கு முன்னர் ஆட்சிபுரிந்த பாண்டிய மன்னர்களாக அறியப்படுகின்றனர். இவருள் வடிம்பலம்ப நின்ற பாண்டியன் நிலந்தரு திருவிற் பாண்டியன் எனவும், பாண்டியன் மாகீர்த்தி எனவும் வழங்கப்பெறுவன். இவன் குமரி நாட்டில் பஃறுளி என்னும் ஆற்றை வெட்டுவித்துக் கடல் தெய்வத்திற்கு விழா எடுத்த செய்தி, புறநானூற்றால் அறியக் கிடக்கின்றது.

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் இயற்பெயர் குடுமி என்பது. இவன் பல வேள்விகள் செய்து சிறப்பு எய்தியவன். ஆதலின், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் சிறப்பினைப் பெற்றுள்ளான். இம்மன்னன் மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனாரால் புகழப்பெற்றுள்ளான். வேள்விக்குடிச் செப்பேடுகளும் இவனைப் புகழ்ந்து கூறுகின்றன.

**கடைச் சங்க காலப் பாண்டியர் :**

பாண்டிய நாட்டின் கோநகராகத் திகழ்ந்த மதுரை மாநகரில், கடைச் சங்கம் நிலவி இருந்தது. இது கி.பி. 2ஆம் நூற்றூண்டோடு முடிவெய்தியது

என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. எனவே, கி.பி. 2ஆம் நூற்றுண்டுவரை ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர்கள் சங்க காலப் பாண்டியர் எனப்படுவர்.

நாற்பத்தொன்பது பாண்டிய மன்னர்கள் கடைச் சங்கத்தைப் புரந்து வந்ததாகக் களவியல் உரை அறிவிக்கின்றது. எனவே, கடைச்சங்க காலத்தில் ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர் நாற்பத்தொன்பதின்மர் என்பது பெறப்படும். ஆயின், சில பாண்டிய மன்னர்களின் பெயர்கள் மட்டுமே சங்க இலக்கியங்களால் அறியப்படுகின்றன. பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும் இருபது பாண்டிய மன்னர்களின் பெயர்களையே அறிய முடிகின்றது என்று கூறுவர்.x

கடைச் சங்ககாலப் பாண்டியருள் பாண்டியன் முடத்திருமாறன், மதிவாணன், பொற்கைப் பாண்டியன், கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி, பாண்டியன் அறிவுடைநம்பி, ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கானப் பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி என்போர் குறிப்பிடத் தக்கவராவர்.

நாற்பத்தொன்பது பாண்டிய மன்னர்களும் ஆயிரத்து எண்ணூற்றைம்பது ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் என்பதும், அம்மன்னர்களுள் பாண்டியன் முடத்திருமாறன் என்பானே காலத்தாற் பழமை வாய்ந்தவன் என்பதும் களவியல் உரையால்

---

x Pandyan Kingdom-by K. A. Nilakanta Sastri.

அறியப்படும். கவியரங்கேறிய பாண்டிய மன்னர் மூவர் என்பதும் அவ்வுரையானே அறியப்படும். ஆயின், கவியரங்கேறிய பாண்டியர் பலர் இருந்த தாக அறிய இயலுகின்றது.* கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி, பாண்டியன் அறிவுடைநம்பி, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், ∴ ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என்போர் செந்தமிழ்ப் புலமை பெற்றுப் பைந்தமிழ்ப் பாக்கள் இயற்றும் வன்மை பெற்றவராய் விளங்கியிருந் தனர். கடைச்சங்க நாளில் தண்டமிழ்ப் புலமை சான்ற பாண்டியர் பன்னிருவர் இருந்ததாகத் தெரிகின்றது.X

மதுரையம்பதியில் கடைச் சங்கத்தை நிறுவிய பெருமை சான்றவன் பாண்டியன் முடத்திருமாறன் என்பவன். இவன் கபாடபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தான். அங்கு இரண்டாம் தமிழ்ச் சங்கம் நிலவி இருந்தது. இவன் காலத்தில் நிகழ்ந்த ஒரு கடல் கோளால் பாண்டி நாட்டின் பெரும் பகுதியும், கபாடபுரமும் அழிந்தொழிந்தன. அக்கடல் கோளுக்குத் தப்பிய பாண்டிய மன்னனும், செந்தமிழ்ப் புலவர்களும் சிறிது வடபால் வந்து, மணலூரில் தங்கி இருந்

---

* Pandyan Kingdom-by K. A. Nilakanta Sastri.

∴ கன்னியாகுமரி மாவட்டத்தில் பூதப்பாண்டி என்று ஓர் ஊருளது. அவ்வூர் இப்பாண்டியன் பெயரால் அமைந்தது—The chronology of the early Tamils–by K. N. Sivaraja Pillai.

X பாண்டியர் வரலாறு—T.V. சதாசிவ பண்டாரத்தார்.

தனர். பின்னர் இம்மன்னன் மதுரைக்கு வந்து, அதனை வளப்படுத்தித் தனது தலைநகராக ஆக்கிக் கொண்டான்.

கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னனே, கடைச் சங்கத்தைப் புரந்து வந்த பாண்டியருள் இறுதியில் இருந்தவன். இவன் காலத்திற்குப் பின்பு கடைச்சங்கம் அழிவுற்றது என்னும் செய்தி, களவியல் உரையால் அறியப்படுகின்றது.

## களப்பிரர் ஆட்சி

கி. பி.மூன்றும் நூற்றாண்டு முதல் ஆறும் நூற்றாண்டுவரை தமிழகத்தில் களப்பிரருடைய ஆட்சி நடைபெறலாயிற்று. களப்பிரருடைய ஆட்சிக் காலம் தமிழகத்தின் வரலாற்றில் ஓர் இருண்ட காலமாகும். களப்பிரரைக் குறித்துத் தெளிவாக அறிந்துகொள்வதற்கு உரிய குறிப்புக்கள் இதுகாறும் கிடைக்கப் பெற்றில. அன்னார் வட புலத்தினின்றும் போந்த அயலவர் என்று கருதப் படுகின்றனர்.* அவர்கள் சேர சோழ பாண்டிய மன்னர்களை வென்று, தமிழகத்தைக் கைப்பற்றி யுள்ளனர். அவர்களுடைய படையெடுப்பால் சேர மன்னர்களே மறைந்துவிட்டனர் என்னலாம்.

கி. பி. மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்தில் களப்பிரர் மரபைச் சார்ந்த ஒரு மன்னன் பாண்டி நாட்டின் மேல் படையெடுத்து வந்து, அதனை வென்று ஆட்சி புரியத் தொடங்கினன். பாண்டிய

* பாண்டியர் வரலாறு—T. V. சதாசிவ பண்டாரத்தார்

நாடு ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகள் களப்பிரர்களுடைய ஆட்சியில் இருந்தது. அக்காலத்தில் பாண்டியர் வலி குன்றி ஒடுங்கி இருந்திருத்தல் வேண்டும். ஆதலின், அவர்களைக் குறித்து அறிந்து கொள்வதற்கு உரிய தெளிவான குறிப்புக்கள் கிடைத்தில. பெரிய புராணமும் கல்லாடமும் கருநாட வேந்தன் ஒருவன் பாண்டி மண்டலத்தைக் கவர்ந்து ஆட்சி புரிந்து வந்ததாகக் கூறுகின்றன. இக்கருநாட வேந்தன் களப்பிர மன்னனாக இருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

களப்பிரருடைய ஆட்சியால் பாண்டி நாட்டில் பல மாறுதல்கள் நிகழ்ந்தன. தமிழ்க்கலை, தமிழர் நாகரிகம் ஆகியனவெல்லாம் அழிந்து போயின. சைவநெறி வீழ்ச்சியுற்றது. சமணமும், பௌத்தமும் செழித்து ஓங்கின. தமிழ் மொழியோ போற்றுவாரற்று வீழ்ச்சி எய்தியது. சுருங்கக் கூறின் கடைச் சங்கமே அழிந்துபட்டமை, ஈண்டுச் சிறப்பாகக் குறிக்கத்தக்கது.

கி. பி. 6, 7ஆம் நூற்றாண்டுகளில் விளங்கி இருந்த பல்லவ மன்னர்களாகிய சிம்ம விஷ்ணு, முதலாம் நரசிம்ம வர்மன் என்போர் களப்பிரரைப் போரில் புறங்கண்டனர். கி. பி. 7, 8ஆம் நூற்றாண்டுகளில் விளங்கிய மேலைச் சாளுக்கிய வேந்தர்களாகிய முதல் விக்கிரமாதித்தன், விசயாதித்தன், இரண்டாம் விக்கிரமாதித்தன் என்போரும் களப்பிரரைப் போரில் வென்றனர். இங்ஙனம் களப்பிரர் வலி குன்றி இருந்த காலத்தில் கடைச் சங்கப் பாண்டியர் குல வழித்தோன்றலாகிய கடுங்கோன்

என்பான் களப்பிர அரசனைப் போரில் வென்று பாண்டி நாட்டைக் கைப்பற்றி மதுரை மாநகரில் வீற்றிருந்து ஆட்சி புரியத் தொடங்கினன். இது வேள்விக்குடிச் செப்பேடுகளால் அறியப்படுகின்றது. எனவே, பாண்டியருடைய ஆட்சி மீண்டும் மதுரை மாநகரில் தொடங்கப் பெற்ற காலம், ஏறத்தாழக் கி. பி. 575ஆம் ஆண்டாக இருக்கலாம் என்று வரலாற்று ஆசிரியர் கருதுகின்றனர்.

**இடைக்காலப் பாண்டியர்கள் :**

கி.பி. 6ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்து கி. பி. 14ஆம் நூற்ருண்டின் முற்பகுதிவரை உள்ள காலம் (கி. பி. 575 முதல் கி. பி. 1310 வரை) இடைக்காலப் பாண்டியர்களுடைய காலமாகும். அக்காலத்தில் இரண்டு பாண்டியப் பேரரசுகள் தோன்றின. முதல் பாண்டியப் பேரரசு கி. பி. 6ஆம் நூற்ருண்டின் இறுதி முதல் கி. பி. 10ஆம் நூற்ருண்டின் தொடக்கம் வரை நிலைபெற்றிருந்தது. இப் பாண்டியப் பேரரசிற்கு அடிகோலியவனே கடுங்கோன் என்பான். இவன் மகனுகிய அவனிசூளாமணி இப்பேரரசை உருவாக்கிய பெருமை சான்றவன். இப்பேரரசு கி. பி. 925இல் முடிவுற்றது. அதன் பின்னர்ப் பாண்டி நாட்டு ஆட்சி, சோழருடைய ஆளுகையின் கீழ் வந்தது.

மூன்ரும் குலோத்துங்கனேடு சோழப் பேரரசு மறையவே, இரண்டாம் பாண்டியப் பேரரசு தொடக்கமாயிற்று. இப்பேரரசைத் தோற்றுவித்தவன் சடாவர்மன் குலசேகர பாண்டியன் (கி. பி.

1190) என்பவன். ஏனைய பாண்டிய மன்னர் இப் பேரரசை விரிவடையச் செய்து உருவாக்கினர். இப் பேரரசு கி. பி. 13ஆம் நூற்றுண்டின் இறுதிவரைக் கும் நிலைபெற்று விளங்கிற்று. அதன் பின்னர்ப் பாண்டிய நாடு முகமதிய மன்னர்களின் ஆட்சியில் புகுந்தது.

இடைக்காலப் பாண்டிய மன்னர்களுள் கடுங் கோன், மாறவர்மன் அரிகேசரி, வரகுண பாண்டி யன், முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், முதலாம் மாறவர்மன் குலசேகரன், கோச்சடையன் ரணதீரன் என்போர் குறிப்பிடத்தக்கவராவர். மாற வர்மன் அரிகேசரியாகிய சுந்தரபாண்டியன் (கூன் பாண்டியன்) காலத்தில், பாண்டிய நாடு உயர்நிலை யில் இருந்தது. இவன் காலத்தில் சீன நாட்டவ ராகிய யுவான் சுவாங் பாண்டிய நாட்டிற்கு வந்து, அதனைக் குறித்துத் தாம் நேரில் கண்டவற்றை எழுதியுள்ளார். கோச்சடையன் ரணதீரன் சேர நாட்டையும், சோழ நாட்டையும், கொங்கு நாட் டையும் வென்றவனாக அறியப்படுகின்றான்.*

கி. பி. 12ஆம் நூற்றுண்டின் இறுதியில் இரண் டாம் பாண்டியப் பேரரசு உயர்நிலையை அடைந் தது. மதுரையிலிருந்து ஆட்சி புரிந்த முதல் மாற வர்மன் சுந்தர பாண்டியன் இப்பேரரசை நிலை பெறச் செய்த பெருமை சான்றவன். முதல் சடைய வர்மன் சுந்தரபாண்டியன் பாண்டி நாட்டை யாண் டும் பரப்பி உயர்நிலைக்குக் கொண்டு வந்தவன்.

* மதுரையைச் சார்ந்து காணப்படும் கோச்சடை என் னும் ஊர், இம்மன்னன் பெயரால் ஏற்பட்டது என்று அறிஞர் பெருமக்கள் கருதுகின்றனர்.

முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியனுடைய காலத்தில் பாண்டிய நாடு வளம் பொருந்தி உயர் நிலையில் இருந்தது. இவன் காலத்தில் பாண்டி நாட்டிற்கு வந்த வெளிநாட்டவராகிய **மார்க்க போலோ, வாசப்** இன்னும் இருவரும் இம்மன்ன னுடைய ஆட்சியைப் புகழ்ந்து கூறியுள்ளனர்.

இதுகாறும் சிரிய நிலையிலிருந்து வந்த இரண் டாம் பாண்டியப் பேரரசு, கி. பி. 14ஆம் நூற்றுண் டின் தொடக்கத்தில் வீழ்ச்சி எய்தத்தொடங்கிற்று. டில்லி சுல்தானுக விளங்கிய அல்லாவுதீன் கில்ஜி யின் படைத் தலைவனுகிய மாலிக்காபூர், பாண்டி நாட்டின்மீது படையெடுத்து வந்து, பல நகரங் களைக் கொள்ளையிட்டுப் பெரும்பொருளைத் திரட் டிக்கொண்டு சென்முன். பாண்டி வேந்தர்களின் பெருமையும் குறையலாயிற்று.

## முகமதியர் ஆட்சி

பாண்டிய நாட்டில் கி. பி. 1330 முதல் கி. பி. 1378 வரையில் முகமதியர் ஆட்சி நடைபெற்று வந்தது. பராக்கிரம பாண்டியனுடைய ஆட்சிக் காலத்தில், முகமதுபின் துக்ளக் என்பான், டில்லி யில் சுல்தானுகவிருந்து ஆட்சி புரிந்து வந்தான். அவன் தென்னுட்டை வெல்லும் பொருட்டு ஜலாலு தீன் என்பானை அனுப்பினுன். அவன் பாண்டிய வேந்தனை வென்று, அந்நாட்டையும் கைப்பற்றி னன். அவன் டில்லி மன்னனுடைய அரசச் சார் பாளனுக மதுரையிலிருந்து அரசாளத் தொடங்கி னுன். நாளடைவில் அவன் டில்லி வேந்தனுடைய தொடர்பை ஒழித்துவிட்டு, மதுரையிலிருந்து தனி

யாட்சி புரியத் தொடங்கினன். இந்நிகழ்ச்சி கி.பி. 1330இல் நிகழ்ந்தது. ஆயினும், கி. பி. 1325 முதல் கி. பி. 1355 வரை தமிழகம் முழுவதும் துக்ளக் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது.

**ஏழு முகமதிய மன்னர்கள் :**

ஜலாலுதீன் அசன்ஷாவிற்குப்பின், ஏழு முகமதிய மன்னர்கள், பாண்டிய நாட்டை மதுரையிலிருந்து ஆட்சி புரிந்து வந்தனர். அவர்களுடைய ஆளுகை 48 ஆண்டுகள் நடைபெற்றது. அம்மன்னர்களின் ஆட்சியினைக் குறித்து முகமதிய வரலாற்று ஆசிரியராகிய இபின்படூடா( (Ibn Batuta) வின் குறிப்புக்களும் அறிவிக்கின்றன. முகமதியருடைய ஆட்சிக் காலத்தில் பாண்டி நாட்டில் பாண்டிய மன்னர் சிலரும் இருந்து வந்தமை, கல்வெட்டுக்களால் புலனுகின்றது.*

## விசயநகர வேந்தர்களின் ஆட்சி

**முகமதியர் ஆட்சி நீங்கல் :**

பாண்டி நாட்டின் மீது விசயநகர வேந்தனுகிய குமார கம்பண்ணன் கி. பி. 1364இல் படையெடுத்து வந்து பாண்டிய நாட்டை வென்றுன். அவனுடைய படையெடுப்பால் முகமதியருடைய ஆட்சி நிலைகுலையலாயிற்று. அவன் பாண்டிய மன்னர்கட்கு உதவியாகச் சில தலைவர்களை ஆங்காங்கு அமர்த்திவிட்டுச் சென்றுன். பின்னர் அத்தலைவர்கள் தாங்களே ஆட்சிபுரியத் தொடங்கினர்.

---

*Pandyan Kingdom – by K. A. Nilakanta Sastri.

**பிற்காலப் பாண்டியர்கள் :**

கி. பி. 15ஆம் நூற்றாண்டில் மதுரையிலிருந்து ஆட்சி புரிந்தவர் வாணாதிராயர் என்பது நன்கு வெளிப்படுகின்றது.* அக்காலத்தில் பாண்டியர் மதுரையினின்று நீங்கித் தென்பாண்டி நாட்டை அடைந்து, ஆங்கிருந்து ஆட்சி புரிந்து வந்தனர். கி. பி. 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கி.பி.17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை பாண்டியர் சிலர் தென்பாண்டி நாட்டில் ஆட்சி புரிந்து வரலாயினர். அவர்கள் கொற்கை, தென்காசி, கரிவலம்வந்தநல்லூர் ஆகியவைகளைத் தங்கள் கோநகர்களாகக் கொண்டிருந்தனர். அவர்களுள் சடையவர்மன் பராக்கிரம பாண்டியன், அதிவீர ராம பாண்டியன், வரதுங்கராம பாண்டியன் என்போர் குறிப்பிடத்தக்கவராவர். பராக்கிரம பாண்டியன் தென்காசித் திருக்கோவிலை எழுப்பிய பெருமை சான்றவன்; அதிவீரராம பாண்டியன் நைடதம் பாடிய பெருமைபெற்றவன்; வரதுங்கராம பாண்டியன் அந்தாதி நூல்கள் இயற்றிய பெருமைக்கு உரியவன்.

தென்பாண்டி நாட்டிலிருந்து ஆட்சி புரிந்து வந்த பாண்டியர் விசயநகர வேந்தர்கட்குத் திறை செலுத்தி வந்தவராவர். இங்ஙனம் குறுநில மன்னர்களாக வாழ்ந்து வந்த பாண்டியர் பின்னர்ப் பெருநிலக்கிழார் நிலையினை எய்தினர். இவ்வாறு ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்குமேல் பாண்டியநாடு

---

* பாண்டியர் வரலாறு— T. V. சதாசிவ பண்டாரத்தார்

விசயநகர வேந்தர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது.

## நாயக்க மன்னர்களின் ஆட்சி

பின்பு பாண்டி நாட்டில் நாயக்க மன்னர்களின் ஆட்சி ஏற்படலாயிற்று. கி. பி. 1529 இல் விசுவநாத நாயக்கர் மதுரை மாநகரிலிருந்து ஆட்சி புரியத் தொடங்கினர். தளவாய் அரியநாத முதலியார் அவருடைய அமைச்சராக இருந்தார். விசுவநாத நாயக்கருக்குப்பின் முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கர், இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கர், முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர் ஆகியோர் ஆட்சிபுரிந்தனர். இவர்களுக்குப் பின் வந்த முதலாம் முத்துவீரப்பர், விசயநகர வேந்தர்களுக்குக் கீழ்ப்படிந்து அரசாள விரும்பவில்லை. அவர் முழு உரிமையோடு ஆட்சிபுரியத் தொடங்கி, நாட்டுப் பாதுகாப்பின் பொருட்டு மதுரையிலிருந்த தலைநகரையும் திருச்சிராப்பள்ளிக்கு மாற்றினர்.

முத்துவீரப்ப நாயக்கருக்குப் பின் அவர்தம் இளவலாகிய **திருமலை நாயக்கர்** கி. பி. 1627 இல் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றார். நாயக்க மன்னர்களுள் இவர் தலைசிறந்தவர். இவர் திருச்சிராப்பள்ளியிலிருந்த தலைநகரை மதுரைக்கு மாற்றினர்; பாதுகாப்புக் கோட்டைகளைக் கட்டுவித்தார்; விசயநகர வேந்தர்களின் தொடர்பை விட்டு விட்டுத் தனியாகச் செங்கோலேச்சினர். இவர் முப்பத்தாறு ஆண்டுகள் சிறப்பாக ஆட்சிபுரிந்தார். பிறகு நாயக்க மன்னர்களின் மரபிலே அரசி மங்கம்மாள் பதினேழு ஆண்டுகள் சிறப்போடு ஆட்சி புரிந்தார்.

நாயக்க மன்னர்களின் ஆட்சி 1736 ஆம் ஆண்டு வரை தொடர்ந்து நடைபெற்று வந்தது. இவ்வாறு ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகள்வரை நாயக்க மன்னர்களின் ஆட்சி பாண்டிய நாட்டில் நிலவியிருந்தது.

## மீண்டும் முகமதியர் ஆட்சி

பாண்டி நாட்டில் மீண்டும் முகமதியர் ஆட்சி தொடங்கிற்று. சந்தா சாயபு மதுரை மாநகரைக் கைப்பற்றிப் பாண்டி நாட்டை ஆட்சி புரியலானார். பாண்டி நாடு இரண்டு ஆண்டுகள் மராத்தியர் ஆட்சியிலும் இருந்தது. அதன் பின்னர் ஆர்க்காட்டு நவாபுவின் ஆட்சியின்கீழ் வந்தது.

## ஆங்கிலேயர் ஆட்சி

அப்பால் கி. பி. 1790இல் ஆங்கிலேயர் பாண்டி நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றினர். அவர்கள் நாட்டைப் பல மாவட்டங்களாகப் பிரித்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒவ்வோர் ஆட்சித் தலைவரை அமைத்தனர். இதுமுதல் இந்திய நாடு குடியாட்சி பெற்ற நாள்வரை, பாண்டியநாடு ஆங்கிலேயரது ஆளுகைக்கு உட்பட்டிருந்தது.

---

# 3. மதுரை மூதூர்

மதுரை மூதூர் பூமாதின் அழகிய முகம் போன்று பொலிவு பெற்று விளங்கியது. அது பாண்டியருடைய கோநகராகச் சிறந்திருந்தது. அந்நகருக்குச் சங்க காலத்திருந்தே **கூடல்** என்னும் பெயரும் அமைந்திருந்தது. புறப்பாட்டு என்னும் சீரிய தமிழ் நூல், '**தமிழ் கெழு கூடல்**' என்று மதுரை மாநகரினைப் போற்றிப் புகழுகின்றது; நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம், '**மதுரை மூதூர்**' 'ஓங்குயர் கூடல்,'

'தென்தமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரை'

'பதியெழு அறியாப் பண்புமேம்பட்ட மதுரை'

'மாட மதுரை மாநகர்'

என்று பலவாறு பாராட்டிப் பேசுகின்றது; 'வான வரும் காண விரும்பும் வளம் மிகுந்த மதுரை' என்று மதுரைக் காஞ்சி என்னும் சங்க நூல் கூறுகின்றது. இங்ஙனம் இலக்கியங்கள் மதுரை மாநகரின் புகழினைக் கூறுவதால், மதுரை மாநகரம் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியிருந்தமை நன்கு பெறப்படும்.

மதுரை மாநகரம் அமைந்த வரலாற்றையும், அதற்கு மதுரை என்னும் பெயர் அமைந்த காரணத்தையும் திருவிளையாடற் புராணம் தெரிவிக்கின்றது. மதுரை மாநகருக்குக் 'கூடல்', 'ஆலவாய்' என்னும் பெயர்கள் அமைந்த வரலாறுகளையும்

அது விளக்கமாகக் கூறுகின்றது. அவற்றை ஈண்டுக் காண்போமாக.

**தனஞ்சயன் கண்ட வியப்பு :**

குலசேகரன் என்னும் பாண்டிய மன்னன் மணவூர் என்னும் ஊரில் வீற்றிருந்து ஆட்சி புரிந்து வந்தான். இவ்வூர் கடம்பவனத்தின் கீழ்த் திசையில் அமைந்திருந்தது. இவ்வூரில் தனஞ்சயன் என்னும் ஒரு வணிகன் வாழ்ந்து வந்தான். அவன் பெருஞ் செல்வம் படைத்தவன்; சிவபெருமானிடத்துச் சிறந்த மெய்யன்பும் உடையவன். ஒரு சமயம் தனஞ்சயன் வேற்றூர் சென்று வாணிகஞ் செய்து விட்டுக் கடம்பவனத்தின் வழியே திரும்பி வந்து கொண்டிருந்தான். அப்பொழுது கதிரவன் மேற்குக் கடலில் வீழ்ந்து மறைந்தான். உலகினைக் காரிருள் சூழ்ந்து கொண்டது. தனஞ்சயன் அங்கே தனிமையுற்று வருந்தினான். அச்சமயம், அவ்விடத்தில், நான்கு கொம்புகளை உடைய எட்டு யானைகளால் சுமக்கப் பெற்றுக், கதிரவனைப் போல ஒளிவீசிக் கொண்டிருக்கும் விமானத்தை நேரில் கண்டான்; அதன் அருகே சென்று அதன்கண் எழுந்தருளி இருந்த சொக்கலிங்கப் பெருமானைக் கண்டு வணங்கிப் பெருமகிழ்வு கொண்டான். அவன் அன்று இரவுப் பொழுதை அங்கேயே கழிக்க விரும்பினான்.

அன்று இரவு சோமவாரம் ஆதலால், அங்கே தேவர்கள் வந்து சிவபெருமானை வணங்கி, நான்கு யாமங்களிலும் சிறப்பாகப் பூசைகளும் செய்தனர். தனஞ்சயன் சோமசுந்தரக் கடவுளின் திருவருளால்

அவர்களைக் கண்டான். அவன் சிவபூசைக்கு உரிய கத்தூரி, பனிநீர் முதலியவைகளை அவர்களிடம் கொடுத்துத், தான் விமானத்தின் திருமுன்பு இருந்து அருச்சனை புரிவித்தான். பின்பு தேவர் கூட்டத்தைக் காணவில்லை; இரவுப் பொழுதும் நீங்கிற்று. விமானத்தில் எழுந்தருளி இருக்கும் சொக்கலிங்கப் பெருமானை மட்டுமே அவன் கண்டான். அவன் அப்பெருமானின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டு, தனது ஊர் வந்து சேர்ந்தான்.

**பாண்டிய மன்னன் செய்தி அறிதல் :**

பிறகு தனஞ்சயன் பாண்டிய மன்னனின் அரண்மனையை அடைந்து, மன்னனைக் கண்டு தான் கண்ட வியத்தகு நிகழ்ச்சிகளை அறிவித்தான். அன்று இரவு சிவபெருமானும் பாண்டியனுடைய கனவில் ஒரு சித்தராய் வந்து தோன்றிப், ''பாண்டியனே! கடம்பவனத்தில் உள்ள காட்டைத் திருத்தி அழகிய நகராக அமைப்பாயாக'' என்று அறிவித்து மறைந்தருளினுர்.

மறுநாட்காலையில் பாண்டியன் தன் அமைச்சர்களோடு அக்கடம்பவனத்தை அடைந்தான்; பொற்ருமரைக் குளத்தில் நீராடினுன்; பொன்ஞல் ஆகிய விமானத்தில் வீற்றிருந்த சோமசுந்தரக் கடவுளைக் கைகூப்பி வணங்கினுன்; அப்பெருமானைப் பலவாறு துதித்துப் போற்றினுன். அவனுடைய கண்களினின்று மகிழ்ச்சிக் கண்ணீர் பெருகி வழிந்தது. பின்பு அவன் அங்கே ஓரிடத்தில் அமர்ந்திருந்தான். அவனுடைய ஆணையால் காட்டினை

அழித்து அழகிய நகரமாக்கும் தொழிலாளர் பலர் வந்து சேர்ந்தனர். அவர்கள் காட்டில் உள்ள மரங்கள் முதலியவற்றை வெட்டி எறிந்து, நிலத்தைச் செப்பஞ் செய்தனர்.

பிறகு அரசன் அமைச்சர்களிடம், 'நகர் எடுப்பது எவ்வாறு?' என்று ஆராய்ந்தான். அச்சமயம் சிவபெருமான், முன்பு கனவில் தோன்றிய படியே ஒரு சித்தராக அங்கே வந்தருளினர். பாண்டியன் அவருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்தான். அப்பொழுது அப்பெருமான் சிற்ப நூல் முறைப்படி கோவிலும், மண்டபமும், கோபுரமும், நகரமும் அமைக்கும் முறையினை வகுத்து உரைத்துவிட்டு மறைந்தருளினர்.

**திருக்கோவில் அமைப்பு :**

பாண்டியன் சித்தர் அருளிச்செய்தவாறே சிற்ப நூல் வல்லாரைக்கொண்டு திருக்கோவில், திருநகரம் முதலியன அமைக்கத் தொடங்கினன்; பதும மண்டபம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், அறுகாற் பீடம், நிருத்த மண்டபம், சொக்கலிங்கப் பெருமான் திருக்கோவில், அவருக்கு வலப் பாகத்தில், மீனுட்சியம்மையின் திருக்கோவில், திருமதில்கள், மண்டபங்கள், கோபுரங்கள், சுற்று மதில், அகழி ஆகிய இவற்றை அழகுபெற அமைத்தான்.

**நகர் அமைப்பு :**

அதன் பிறகு பாண்டியன் கடை வீதிகள், தெற்றியம்பலங்கள், திருவிழாக் கொள்ளும் திருவீதிகள், மாளிகைகள் பொருந்திய பெரிய வீதிகள்,

அம்பலங்கள், மன்றங்கள், செய்குன்றுகள் ஆகியவைகளை அமைப்பித்தான்; நாடகசாலைகள், சைவ முனிவர் தங்கும் மடங்கள், அந்தணர் வீதிகள், அரசர் வீதிகள், வணிகர் வீதிகள், வேளாளர் வீதிகள், யானைக்கூடங்கள், குதிரைப் பந்திகள், தேர்ச்சாலைகள், கல்விச்சாலைகள், அறச் சாலைகள் முதலியவற்றையும் அமைப்பித்தான்; கிணறுகள், குளங்கள், நந்தன வனங்கள், சோலைகள், தோட்டங்கள் ஆகியவைகளையும் அமைத்து நகருக்கு அழகு செய்தான்.

**'மதுரா நகர்' என்னும் பெயர் :**

பாண்டியன் இங்ஙனம் நகரை அமைத்தபிறகு அதனைத் தூய்மை செய்யக் கருதினான். அப்போது சோமசுந்தரக் கடவுள் தமது சடையிலுள்ள புத்த முதத்தைச் சிந்தினார். அஃது அந்நகர் முழுமையும் அமிர்த மயமாக்கித் தூய்மை செய்தது. அவ் வமுதம் மதுரம் வாய்ந்த தன்மைத்தாய் இருந்த மையால், அதற்கு **மதுரா நகர்** (மதுரை மாநகர்) என்று பெயர் கூறினர். பிறகு பாண்டியன் மதுரை மாநகரின் கீழ்த்திசையில் ஐயனாரையும், தென் திசையில் சத்தமாதரையும், மேற்குத் திசையில் திருமாலையும், வடக்குத் திசையில் பத்திரகாளி யையும் காவலாக நிறுவினான். அப்பால் அவன் மதுரை மாநகரினைப் பல்வகைச் சிறப்புக்களுடனும் வளப்படுத்தினான்.

## நான்மாடக் கூடல்

**அபிடேக பாண்டியன் :**

வருணன், தன் வயிற்று நோயைத் தீர்க்கும் பொருட்டுக் கடலை ஏவி மதுரை நகரினை அழிக்கச்

செய்த செயல் வெற்றியுருமையால், அவன் ஏழு மேகங்களையும் அழைத்து, மிக்க மழையினைப் பெய்து, அம்மாநகரினை அழிக்கும்படி ஆணையிட்டான். உடனே ஏழு மேகங்களும் வானும், பூமியும், திசைகளும் தெரியாவண்ணம் பரவி இருளைத் தோற்றுவித்தன. அவை இடித்து முழங்கிப் பெருமழையினைப் பொழிந்தன. அபிடேக பாண்டியனும் மதுரை மாநகர மக்களும் 'உலகம் அழியும் நாள் இதுவோ?' என்று எண்ணி மனம் வருந்தினர். பாண்டிய மன்னனுே மக்கள் புடைசூழச் சோம சுந்தரக் கடவுளின் திருக் கோவிலை அடைந்து, அப் பெருமானின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "எங்கள் நல்லுயிர் காத்தல் வேண்டும்" என்று வேண்டினுன்.

**சிவபெருமான் அருள் புரிதல்:**

உடனே சிவபெருமான் தன் சடையில் இருந்த நான்கு மேகங்களையும் நோக்கி, "நீங்கள் மதுரை மாநகரின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்து, நான்கு மாடங்களாகி, ஏழு மேகங்களையும் விலக்குங்கள்" என்று கட்டளையிட்டார். அவை நான்கு மாடங்களாகி வளைந்து, நான்கு திசைகளிலும் சூழ்ந்தன; மூட்டுவாய் தெரியாமல் ஒன்றுபட்டு மாடங்களும் கோபுரங்களும், செய்குன்றுகளும் தூண்களாக நின்று தாங்க, நகர முழுமையும் மூடிக்கொண்டன. பாண்டியனும், அமைச்சர்களும், குடிமக்களும், பிறரும் நான்கு மாடங்களின் உள்ளும் இன்பமாகத் தங்கி இருந்தனர். ஏழு மேகங்களாலும் பெய்த மழைத்துளிகள் மாடங்களின் மேல் விழுந்து

சிதறின. இங்ஙனம் மதுரை மாநகரம் நன்கு பாது காக்கப்பட்டது.

**நான்மாடக் கூடல் :**

இதனுல் மேகங்கள் ஏழும் நாணமுற்று நின்றன. தன் செயல் வெற்றி பெறுமை கண்டு வருணனும் வெட்கி நின்ருன். பின்பு அவன் பொற்ருமரைக் குளத்தில் நீராடி இறைவனை வழி பட்டுத் தன் குற்றத்தைப் பொறுத்தருளுமாறு வேண்டினுன். அவன் பன்முறை இறைவனைத் துதித்து வணங்கிச் சில வரங்களேயும் பெற்றுக் கொண்டு தன் நகரினை அடைந்தான். சிவபெரு மான் ஏவிய நான்கு மேகங்களும் நான்கு மாடங்க ளாகக் கூடியமையால், அன்று முதல் மதுரை மாநகரம் **நான்மாடக் கூடல்** என்னும் பெயரினைப் பெற்றது.*

## திருவாலவாய்

**ஊழிக்காலம் :**

**கீர்த்தி பூடணன்** என்னும் பாண்டிய மன்னன் ஆட்சி புரிந்துவரும் நாளிலே ஊழிக்காலம் தோன் றிற்று. கருங்கடல் ஏழும் பொங்கி எழுந்து உலகத் தையே அழித்தன. அக்காலத்திலும் அங்க யற்கண் அம்மையின் திருக்கோவிலும், விண்ணிழி விமானமும், பொற்ருமரைக் குளமும், இடப மலேயும், யானை மலேயும், நாகமலேயும், பசுமலேயும்,

---

* நான்கு மேகங்களும் நான்கு மாடங்களாகித் தடுத்த இடம் 'மாடக்குளம்' என்பர். இவ்வூர் மதுரைக்கு மேற்கே அமைந்திருக்கிறது.

பன்றிமலையும் அழியாதிருந்தன. பின்பு ஊழிக் கால நீர் வற்றியது. சிவபெருமான் முன்போலவே உலகத்தைப் படைத்துச் சேர சோழ பாண்டிய ராகிய மூவேந்தர் குடிகளையும் படைத்தருளினர்.

**வங்கிய சேகர பாண்டியன் :**

பாண்டியர் குலத்திலே **வங்கிய சேகர பாண்டியன்** என்னும் மன்னன் தோன்றினன். அவன் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோவிலைச் சூழ்ந்து அழகிய சிறிய நகரம் ஒன்றை அமைத்து ஆட்சி புரிந்து வந்தான். மக்களின் கூட்டம் பெருகியது. அவர்கள் வாழ்வதற்கு அந்நகரில் இடம் போதவில்லை. பாண்டியன் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோவிலை அடைந்து, அப் பெருமானை வணங்கி, ''இந்நகருக்கு ஆதியிலே வரையறுக்கப்பட்ட எல்லையைக் காட்டியருளுக'' என்று வேண்டினன்.

**சிவபெருமான் சித்தராய் வருதல் :**

அடியவர்க்கு எளியவராகிய சிவபெருமான் ஒரு சித்தராய் அவன் முன்பு தோன்றினர். அவருடைய அரைஞாண், பூணூல், வெற்றிமாலை, குழை, குண்டலம், பாதகிங்கிணி, கங்கணம் எல்லாம் பாம்புகளாகவே காணப்பட்டன. அவர் தமது திருக்கரத்தில் கங்கணமாகக் கிடந்த பாம்பினைப் பார்த்து, ''நீ இப்பாண்டியனுக்கு நகரத்தின் எல்லையை அளந்து காட்டு'' என்று பணித்தார். அப்பொழுது பாம்பு அவ்ரை வணங்கி, ''பெருமானே! இந்நகரம் அடியேன் பெயரால் விளங்கும்படி அருள் புரிக'' என வேண்டியது.

கருணைக் கடலாகிய பெருமானும், ‘‘அங்ஙனமே ஆகுக’’ என்று அருள் புரிந்தார்.

**பாம்பு எல்லையைக் காட்டுதல் :**

உடனே பாம்பு கிழக்குத் திசையிலே விரைந்து சென்று வாலை நீட்டி, நகருக்கு வலமாக நிலத்திற் படிந்து உடலை வளைத்து, வாலைத் தனது வாயில் வைத்துப் பாண்டியனுக்கு நகரின் எல்லையைக் காட்டியது. பின்பு அது திரும்பி வந்து சித்தரின் கையிலே மீண்டும் கங்கணமாக அமைந்தது.

**பாண்டியன் எல்லை அமைத்தல் :**

பாண்டியன், பாம்பு வளைந்து எல்லை காட்டிய படியே பெரிய மதிலை எழுப்பினன்; தெற்கு வாயிலுக்குத் திருப்பரங்குன்றமும், வடக்கு வாயிலுக்கு இடப மலையும், மேற்கு வாயிலுக்குத் திருவேடகமும், கிழக்கு வாயிலுக்குத் திருப்பூவணமும் எல்லைகளாக அமைத்தான். இங்ஙனம் அமைக்கப்பெற்ற மதில், ‘ஆலவாய் மதில்’ என்று பெயர் பெற்றது. அந்நகரமும் அன்று முதல் ஆலவாய் என்று பெயர் பெற்றது. இங்ஙனம் அமைக்கப்பெற்ற ஆலவாய் நகர் புதிய வீதிகளையும், பிற அமைப்புக்களையும் கொண்டு விளங்கியது.

---

# 4. சங்க கால மதுரை

மதுரை மூதூர் சங்க நாளிலேயே சிறப்போடு விளங்கிற்று. சங்க இலக்கியங்கள் மதுரை மாநகரின் சிறப்புக்களை உரைப்பதனால் இது நன்கு துணியப்படும். மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, சிலப்பதிகாரம், பரிபாடல் போன்ற இலக்கியங்கள் மதுரை மாநகரினைக் குறித்து விரிவான சில செய்திகளைத் தருகின்றன. அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, மணிமேகலை போன்ற இலக்கியங்களும்--ஒரு சில குறிப்புக்களை உதவுகின்றன. இவ்விலக்கியங்களின் துணையால் மதுரை மூதூர் அக்கால நகரக் கலையமைப்பின்படி நன்கு அமைக்கப்பட்டிருந்தது என்பது விளக்கமாகின்றது.

**இயற்கை அழகு :**

மதுரை மூதூர் இயற்கை எழிலும், செயற்கை நலமும் ஒருங்கே பெற்ற சிறப்பினை உடையதாகும். இம்மாநகரினைச் சூழ்ந்து அழகான இயற்கைக் காட்சிகள் அமைந்திருந்தன. மலர்களைத் தருகின்ற பல்வேறு வகையான மரங்களும், மணமலர்ச் செடி கொடிகளும் எங்கணும் சூழ்ந்து காணப்பெற்றன; உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் செந்நெல் வயல்களும், பண்ணைகளும் எங்கும் சூழ்ந்திருந்தன; குளங்களும், விரிந்த நீருடைய ஏரிகளும் ஆங்காங்கு விளங்கித் திகழ்ந்தன; தென்னையும் கமுகும் செறிந்து தோன்றின; அழகிய சோலைகளும், வாழைத் தோட்டங்களும், மாந்தோப்புக்களும் சூழ்ந்து விளங்கின. இவ்வாறு சங்க காலத்திலேயே

மதுரை மாநகரம் உள்ளத்தை அள்ளும் இயற்கை எழிலோடு விளங்கித் திகழ்ந்தது.

**வையையாறு :**

மதுரை மூதூர் வையையாற்றங்கரையில் அமைந்திருந்தது. அம்மாநகரின் வடபால் வையையாறு ஓடியது.* இவ்யாற்றில் பல சிறந்த துறைகள் இருந்தன. இவ்யாற்றினைக் கடப்பதற்குப் பலவகையான ஓடங்களும், மரப்புணைகளும் பயன் படுத்தப்பட்டு வந்தன. ஆற்றங்கரையில் பாணர் குடியிருப்புக்கள் இருந்தன. ஆற்றின் கரைகளைப் பாதுகாப்பதற்குக் காவலர்களும் ஏற்படுத்தப் பட்டிருந்தனர்.

**புறநகரும் அகநகரும் :**

இம்மூதூர், புறநகர், அகநகர் ஆகியவைகளைக் கொண்டு சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்தது. புறநகர் கழனிகளும், ஏரிகளும், பொழில்களும், தெங்கும், வாழையும், கமுகும் பொருந்தி இருந்தது. அங்கே தவம் புரிவோர் உறையும் தவப்பள்ளிகளும் இருந்தன.

அகநகர் மன்னனுடைய அரண்மனையினையும், அகன்ற நெடிய தெருக்களையும், கோவில்களையும், அம்பலங்களையும், முச்சந்தி, நாற்சந்திகளையும், மன்றங்களையும் கொண்டு விளங்கிற்று. அந்நகரில் செழுங்குடிச் செல்வர்கள் வாழும் வீதிகளும், கலை வல்லார் வீதிகளும், அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் வீதிகளும் சிறந்திருந்தன; ஆவண

---

* பரிபாடல் : 10, வரி – 12

வீதியும், ஆயர் குலத்தவர் வாழும் வீதியும், தேரோடும் வீதிகளும் அமைந்திருந்தன. அரசனுடைய அரண்மனை நகரின் நடுவிலே அமைந்திருந்தது.*

இவ்வகநகரில் பௌத்தப்பள்ளி, அந்தணர் பள்ளி, அமணப்பள்ளி, அறவோர் பள்ளி, அறங்கூறவையம், அறக்கூழ்ச்சாலை ஆகியன விளங்கின. சிவபெருமான் கோவில், திருமால் கோவில், பலதேவர் கோவில், முருகன் கோவில் ஆகிய கோவில்கள் இருந்தன. ஐயை (துர்க்கை) கோவில், கலைமகள் கோவில் ஆகியனவும் விளங்கின. நகரி காவல் தெய்வங்களும் உள்ளன. காவற்சோலை, நீராவிச்சோலை முதலியனவும் காணப்பெற்றன.

வீதிகளில் சாளரங்களை உடைய உயர்ந்த் மாடங்கள் விளங்கித் திகழ்ந்தன. ஊர்க்காவலர்கள் நடுஇரவிலும் காவலில் தப்பாது தெருக்களில் உலவித் திரிந்தனர். மக்களுக்கு வேண்டிய நீரை ஆற்றிலிருந்து பெறும் பொருட்டும், மழைநாளில் நகருக்குள் பெருகும் நீரை வெளியேற்றுவதன் பொருட்டும், கோட்டை மதிலுக்குக் கீழே நீர்ப் போக்கு வரவுக்குரிய மறைவு வழி அமைக்கப்பட்டிருந்தது. வையையின் வெள்ளம் அதன் வழியாக மதுரை மாநகருக்குள்ளே வரும்.x

மதுரை நகரில் பல்வேறு வகையான தொழில் புரிவோரும் வாழ்ந்து வந்தனர். மக்கள் இன்பமாகப் பொழுதினைப் போக்கினர். அம்மாநகரிலே

* பரிபாடல்

x பரிபாடல்: 20

ஓணவிழா நடைபெற்றது.x வையையில் புது வெள்ளம் வரும்பொழுது மக்கள் நீராட்டு விழா வினை மேற்கொண்டனர். பாண்டிய மன்னனும் மக்களோடு சென்று வையைப் புது வெள்ளத்தில் நீராடி மகிழ்ந்தனன். மன்றுகள்தோறும் குரவைக் கூத்துக்களும், சேரிகள்தோறும் பாட்டுக்களும், கூத்துக்களும், புனைந்துரைகளும் நிகழ்ந்தன. மக்கள் ஏறிச் செல்வதற்கு குதிரைகள், யானைகள், கோவேறு கழுதைகள், சகடங்கள், பல்லக்குகள் ஆகியவைகளைப் பயன்படுத்தினர்.

**கடைச் சங்கம் :**

மதுரை மாநகரில் தமிழ்ச் சங்கம் நிலவியிருந்தது. தமிழ் வளர்த்த பெருமை மதுரை மாநகருக்கே சிறப்பாக உரியது. அதனாலேயே,

> "தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
> மகிழ்நனை மறுகின் மதுரை"

என்று சிறுபாணாற்றுப்படை அழகாகக் கூறுகின்றது. 'தமிழ்கெழு கூடல்' என்று புறநானூறும், 'தென்தமிழ் மதுரை' என்று மணிமேகலையும் முழங்குகின்றன.

> "உயர்மதிற் கூடலின் ஆய்ந்தஒண் டீந்தமிழ்"

என்று மணிவாசகப் பெருமானும் போற்றிப் புகழ்வாராயினர்.

"கடைச் சங்கத்தில் நாற்பத்தொன்பது புலவர்கள் இருந்து வந்தனர். அகநானூறு, புற

---

x ஓணவிழா இந்நாளில் கேரள மாநிலத்தில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்று வருகின்றது. அம்மாநிலம் பழங் காலச் சேரநாடு என்பதனை இவ்விழா நினைவூட்டுகிறது.

நானூறு, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, பரிபாடல் முதலியன அப்புலவர்களால் இயற்றப்பெற்றன. அகத்தியமும், தொல்காப்பியமும், அவர்களுக்கு இலக்கண நூல்களாக அமைந்திருந்தன. இச்சங்கம் ஆயிரத்து எண்ணூற்றைம்பது ஆண்டுகள் நிலவி இருந்தது'' கடைச் சங்கத்தைக் குறித்துக் களவியல் உரை இவ்வாறு கூறுகின்றது.

மதுரைப் புலவர்கள் :

மதுரைக் கணக்காயனுர், மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர், மதுரை அளக்கர் ஞாழலார் மகனுர் மள்ளனுர், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனுர், மதுரை இளங்கண்ணிக் கௌசிகனுர், மதுரை ஓலைக்கடைக் கண்ணம் புகுந்தாராயத்தனுர், மதுரை கள்ளிற்கடையத்தன் வெண்ணுகனுர், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர், மதுரைத் தமிழ்க் கூத்தனுர், மதுரை நக்கீரர், மதுரைப் படைமங்க மன்னியார், மதுரைப்பூதனிள நாகனுர், மதுரைப் பேராலவாயார், மதுரை மருதனிள நாகனுர், மதுரை வேளாசான், மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனுர், மதுரை ஈழத்துப்பூதன் தேவனுர், மதுரைக் கண்ணத்தனுர், மதுரைக் கூத்தனுர், மதுரைத் தத்தங்கண்ணனுர், மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனுர், மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனுர், மதுரை பொன்செய் கொல்லன் வெண்ணுகனுர், மதுரை மருதங்கிழார் மகனுர் பெருங்கண்ணனுர் முதலிய புலவர்களும், பிற புலவர் பெருமக்களும் மதுரை மூதூரில் வாழ்ந்து வந்தவராவர்.

# 5. இலக்கியங்களிலே மதுரை மாநகரம்

## மதுரைக் காஞ்சியிலே மதுரை

**மதுரைக் காஞ்சி :**

சங்கத் தமிழ் நூல்களுள் ஒன்று பத்துப்பாட்டு. இந்நூலுள் உள்ள பத்துப் பாட்டுக்களுள் ஒன்று மதுரைக் காஞ்சி என்பது. இது பத்துப் பாட்டுக் களுள் அளவால் நீண்ட பாட்டாகும். இது மதுரை யிடத்து அரசற்கு உணர்த்திய காஞ்சி என்று விரித்து உரைக்கப்படும். காஞ்சி என்பதற்கு வீடுபேற்றின் காரணமாகப் பல்வகைப்பட்ட நிலை யாமைகளை உணர்த்துதல் என்பது பொருள்.

மதுரைக் காஞ்சியினை மாங்குடி மருதனார் என்னும் நல்லிசைப் புலவர் இயற்றியருளினார். இவர் பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனுடைய அவைக்களத்தே தலைமைப் புலவராக வீற்றிருந்தவர். இவரது ஊர் மாங்குடி என்பதும், இவர் மருதத் திணையைச் சிறப்பித்துப் பாட வல்லவர் என்பதும், இவர்தம் பெயரால் அறியப்படுகின்றன. இவரும் மாங்குடி கிழார் என்பவரும் ஒருவராகக் கருதப்படுகின்றார்.*

இவர் மதுரைக் காஞ்சியைப் பாடிய பின்னர்க் காஞ்சிப் புலவன் என்றும், மதுரைக் காஞ்சிப் புலவன் என்றும் அழைக்கப்பட்டார். இவர் இங்ஙனம் அழைக்கப் பெற்றமையே மதுரைக்

---

* புறநானூறு-டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பு. ஆசிரியர் வரலாறு.

காஞ்சியின் மாண்பினை விளக்குவதற்குப் போதிய சான்றாக அமைகின்றது.

மதுரைக் காஞ்சியில் பாண்டி நாட்டின் இயற்கை வளன்களும், மதுரை மாநகரின் பெருமைகளும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. மதுரை மாநகரின் பெருமையினைக் கூறும்பொழுது, வையையாறு, மதில், அகழி ஆகியவற்றின் சிறப்புக்களும் இனிது உணர்த்தப்படுகின்றன. இந்நூலால் பழங்கால மதுரையின் அழகினையும், அதன் மாண்பினையும் செவ்வனம் உணர்ந்துகொள்ள இயலுகின்றது. சுருங்கக் கூறின், இந்நூல்; பழங்கால மதுரையினை நம் அகக்கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றது என்னலாம்.*

இனி, மதுரைக் காஞ்சியில் கூறப்படும் செய்திகளைக் காண்போம்.

**வையையாறு :**

வையையாற்றின் கரையிலே மயில்கள் ஆரவாரிக்கும் அழகிய சோலைகள் இருந்தன. அவைகளிலே முசுக்கலைகள் தாவி மகிழ்ந்தன. அவற்றின் மந்திகள் மரக்கிளைகளிலே விளையாடுவதற்கு ஏற்றவாறு மரங்கள் நெருங்கி நின்றன. வையையாற்று நீர் உயர்ந்த மலையுச்சியினின்றும் வீழ்ந்து ஓடியது. அந்நீர் கொழித்து ஓடியமையால்,

---

* மதுரை மாநகரைக் குறித்து மதுரைக் காஞ்சி கூறும் செய்திகளோடு இக்கால மதுரையை ஒப்பிட்டு நோக்கினால், பழங்கால மதுரைக்கும், இக்கால மதுரைக்கும் பெரிதும் வேறுபாடு இல்லை என்பதும், பற்பல செய்திகளில் ஒருமைப்பாடு காணப்படுவதும் நன்கு உணரப்படும்.

ஆற்றிலே மணற்குன்றங்கள் பொருந்தி இருந்தன. நீரடையும் கரைகள்தோறும் கோங்க மரங்கள் நின்றன. கோங்கின் மலர்களும் ஏனைய மலர்களும் பரந்து, மாலை ஒழுகினாற்போல மிக்க நீரானது ஓடியது. வைகைத் துறைகள்தோறும் பூந்தோட்டங்களால் சூழப்பெற்ற பெரிய பாணர் குடியிருப்புக்களும் இருந்தன.

**அகழியும் மதிலும் :**

மதுரையைச் சூழ்ந்து ஆழ்ந்த அகழி இருந்தது. அது நீலமணி போன்ற நீரை உடையதாக விளங்கியது; உழிஞைப் போர் கருதி வரும் வேந்தர் அதனைக் கண்டு அஞ்சிப் புறங்காட்டி மீளும் தன்மை உடையது. மதுரை மூதூர் வானுற ஓங்கி நிற்கும் உயர்ந்த மதில் பொருந்தியதாக இருந்தது. அம் மதில் சுரங்க வழிகளையுடையது. அம்மதிலில் வலிமை பொருந்திய வாயில் அமைந்துள்ளது. அவ் வாயிலில் நெய் பலகாலும் இடுவதனால் கருமை நிறம் வாய்ந்த திண்ணிய கதவு அமைந்திருந்தது. அவ்வாயில், மேகம் உலவுகின்ற மலைபோன்று உயர்ந்த மாடத்தையும் உடையது; வையையாற்றில் இடைவிடாது நீர் ஒழுகுவது போல, மக்களும் மாவும் இடையறாது வழங்கும் இயல்பையும் உடையது. மதுரை மாநகரம் ஆறு கிடந்தாற் போன்ற அகன்ற நெடிய தெருக்களைப் பெற்றிருந்தது. அத் தெருக்களிலே தென்றற் காற்று ஒலிக்கும் பல சாளரங்களை உடைய மனைகள் அமைந்திருந்தன.

**அங்காடிகள் :**

கடைத்தெரு அங்காடி என்று வழங்கப்பெறும். மதுரை மாநகரில், நாளங்காடிகளும், அல்லங்காடி

களும் அமைந்திருந்தன. நாட்காலையில் கூடும் கடை நாளங்காடி (Day Bazaar) என்றும், மாலைப் பொழுது கூடும் கடை அல்லங்காடி (Night Bazaar) என்றும் பெயர் பெற்றன.

அங்காடித் தெருக்கள் ஓவியங்களைக் கண்டாற் போன்று கண்களுக்கு இனிமையாகக் காணப்பட்டன. அவைகளில் கோவில்களுக்கு விழா நடத்திக் கட்டிய கொடிகளும், படைகள் வெற்றி பெற்றதனால் கட்டப்பெற்ற வெற்றிக் கொடிகளும், கள்ளின் மிகுதியைச் சாற்றுங் கொடிகளும், கல்வி, தவம், கொடை ஆகியவற்றின் பெருமைகளை அறிவிக்கும் கொடிகளும் மலையிடத்து அருவி அசையுமாறு போல அசைந்துகொண்டிருக்கும்.

நாளங்காடி :

நாளங்காடியில் பண்டங்களைக் கொள்ளும் வேறுபட்ட மொழிகளையுடைய மக்கட் கூட்டத்தின் ஓசை மிகுந்திருக்கும். ஒருபால் முரசை ஒலித்து விழாவைச் சாற்றும் ஓசை, காற்றால் கொந்தளிக்கும் கடலொலிபோல முழங்கும். இனிய வாச்சியங்களின் ஒலியினைக் கேட்டு மகிழ்பவர் தெருக்களிலே நின்று ஆடுவர். பூந்தட்டில் இட்டு வைத்த பூவினை விற்பவரும், பல்வகையான பூமாலைகளை விற்பவரும், பூந்தாதுக்கள் போலப் பரக்கும் சுண்ணத்தை விற்பவரும், பசிய பாக்குடனே வெற்றிலையினை விற்பவரும், சங்கு சுடுதலால் உண்டான சுண்ணும்பை விற்பவரும், பலவாகிய பண்டங்களைத் தம்மிடத்துச் சேர்த்துக்கொண்டு விற்பவரும் மாடங்களின் நிழலிலே அமர்ந்திருப்பர். அவர்கள்

சினமிக்க யானையும், கடுக ஓடும் தேரும், புரவிகளும், யானைபோற் செல்லும் வீரரும் ஆகிய நாற்படையும் வருதலைக் கண்டு அஞ்சி ஏங்கிப் பெருமுச்சு விடுவர். அவை பெயர்ந்து சென்றபின், இனிமையாக இருந்து இளைப்பாறுவர். முதுபெண்டிர் நுகர் பொருள்களைப் பூவுடன் ஏந்திச் சென்று மனைகள் தோறும் உலாவித் திரிவர். இவர்களால் எழுந்த ஓசை, முரசறைந்து.விழாவினை அறிவித்தபொழுது, அதற்குத் திரண்டெழுந்தவர் அந்தியில் எழுப்பிய ஓசைபோன்று பெருகி இருந்தது.

அல்லங்காடி :

அல்லங்காடியில் அந்திக்காலத்துக்கு முன்னாக எடுத்த விழாவில் வாச்சியங்கள் ஒலிக்கும் ஓசை எழும். பௌத்தப்பள்ளி, அந்தணர்பள்ளி, அமணப்பள்ளி, அறங்கூறவையம் ஆகியவைகளி லும், காவிதிப்பட்டம் கட்டிய அமைச்சர்களிடமும் ஓசை எழும். பண்டங்களை விற்கும் வணிகர், புரோகிதர், தானைத் தலைவர், தூதுவர், ஒற்றர் என்னும் நாற்பெருங் குழுவினர், பாற்சோறு, பால் முதலியவற்றைக் கொண்டுவந்து இடுபவர் ஆகியோரிடமிருந்தும் ஓசை எழும். அறுத்த சங்கை வளை முதலியனவாகக் கடைவாரும், அழகிய மணிகளைத் துளையிடுவாரும், பொன்வாணிகரும், புடைவைகளை விற்பாரும், பூவும் சாந்தும் விற்பாரும், ஓவியக்காரரும், நெய்தற்றொழிலைச் செய்வாரும் கூடி எழுப்பும் ஓசை, சேரனுடைய நாளோலக்க இருப்பில் கற்றோர் திரண்டு தருக்கங்களைக் கூறும் ஆரவாரம் போன்றிருக்கும். பலநாட்டு வணிகர் பாண்டிய நாட்டிற் செய்த பேரணிகலன்களைக்

கொண்டு போதல் காரணமாகவும், பலநாட்டுப் பண்டங்களை இறக்குமதி செய்யும் காரணமாகவும் எழும் ஓசை, தத்தம் குஞ்சுகளுக்கு இரையினைக் கவர்ந்து கொண்டு செல்லும் பல்வேறு வகைப்பட்ட புள்ளினங்கள் எழுப்பும் ஓசையை ஒத்திருக்கும்.

**மாலைக்காலம் :**

ஞாயிறு மேற்றிசையில் அத்தமலையைச் சென்று சேர்ந்தது. அப்பொழுது அழகிய மகளிர் நெடிய ஒளியினை உடைய விளக்கினை ஏற்றுவீர்; தமது நெடிய கூந்தலில் தடவிய மயிர்ச் சந்தனத்தை அலைத்து நீக்குவர்; கத்தூரியையும், நறிய சந்தனத்தையும் தடவுவர்; மெல்லிய நூலாற் செய்த ஆடைகளுக்கு அகிற்புகை ஊட்டுவர். இவ்வாறு மாலைக் காலம் கல்லென்னும் ஓசையை உடையதாயிருக்கும்.

**முதல்யாமம் :**

திருமால் பிறந்த ஓணநாளில் ஊரிடத்தே விழா நிகழும். மறவர் கள்ளை உண்டு மகிழ்வோடு திரிவர். குழந்தைகளைப் பெற்றுப் புனிறு தீர்ந்த மகளிர் குளத்து நீரில் நீராடுவர். முதற் சூல் கொண்ட மகளிர், இடுக்கண் இன்றிப் புதல்வரைப் பெற்றெடுக்கும் பொருட்டுத் தெய்வத்தைப் பரவுவர்; தெய்வந்தொழுது பாற்சோறு முதலியவற்றை உண்பர். குறிஞ்சிப் பூவைச் சூடிய மகளிர் முருகனை வழிபட்டு மன்றுகள்தோறும் குரவைக் கூத்து நிகழ்த்துவர்; சேரிகள்தோறும் புனைந்துரைகளும், பாட்டுக்களும், கூத்துக்களும் நிகழும். இதனால் வேறுவேறாகிய ஆரவாரம் மிகுந்திருக்கும்.

**இரவுப்பொழுது :**

இரவுப்பொழுதில் சங்குகள் ஆரவாரம் ஒழிந்து அடங்கிக் கிடக்கும். மகளிர் கடைகளை அடைத்து விட்டுத் துயிலினை மேற்கொள்வர். மெல்லிய அடையினையும், பருப்பும் தேங்காயுமாகிய உள்ளீடு களோடு கண்டசருக்கரை கூட்டிப்பிடித்த அப்பங் களையும், இனிய பாகோடு சேர்த்துக் கரைத்த மாவினையும் உடைய அப்ப வாணிகர் அவற்றோடே இருந்து உறங்குவர். திருநாளில் கூத்தாடுங் கூத்தர் அதனை ஒழிந்து துயில் கொள்வர். ஊர் மக்களும் இனிமையாகக் கண் துயில்வர். பேய்களும் வருத்தும் தெய்வங்களும் சுழன்று திரியும். ஊர்காப்பாளர் தேரோடும் தெருவில் நீர் திரண்டு ஒழுகும்படி மழை மிகுதியாகப் பெய்த நடுஇரவிலும் தங்கள் காவலில் தப்பாது உலவி வருவர்.

**வைகறைப் பொழுது :**

வைகறைப் பொழுதிலே அந்தணர் மறையினை ஓதுவர்; யாழோர் மருதப் பண்ணைப் பாடுவர்; பரிக் கோற்காரர் யானைகளுக்குக் கவளத்தை உண் பிப்பர்; குதிரைகள் பந்தியில் நின்று புல்லாகிய உணவினை மெல்லும்; பண்டம் விற்போர் கடைகளை மெழுகுவர்; கள் விற்போர் கள்ளின் விலையினைக் கூறுவர்; மகளிர் சிலம்புகள் ஒலிப்ப வெளியே புறப் படுவர்; சூதர் வாழ்த்துவர்; மாகதர் புகழைக் கூறுவர்; வைதாளிகர் தத்தம் துறைக்குரிய பாடல் களைப் பாடுவர்; பள்ளியெழுச்சி முரசங்கள் ஒலிக் கும்; ஏறுகள் தம்முள் மாறுபட்டு முழங்கும்; கோழிச் சேவல்கள் விடியற் காலத்தை அறிந்து கூவும்; அன்னச்சேவல்களும் மயில்களும் தத்தம்

பேடைகளை அழைக்கும்; *கூட்டில் உறைகின்ற கரடி, புலி முதலிய விலங்குகள் முழங்கும்; பிடியோடு கூடிய யானைகள் பிளிறும். இங்ஙனம் விடியற் காலம் காணப்பெற்றது. அக்காலத்தே போர்க் களத்தினின்று கொண்டு வந்த யானைகளும், பகைவர் ஊரிடத்திருந்து கொண்டு வந்த பசுத் திரளும், தோற்ற வேந்தர் திறையாகக் கொண்டு வந்த ஆபரணங்களும் அரண்மனையை நோக்கிச் செல்லும். அவை அனைத்தும் கங்கையாறு கடலிலே சென்றாற் போல, அளந்து முடிவறிய இயலாத வாறு இருக்கும்.

**நால்வகைப் படைகள் :**

மதுரை மாநகரில் நால்வகைப் படைகளும் இருந்தன. புயற் காற்றில் அகப்பட்டுச் சுழலும் கப்பலைப் போல, யானைப்படை கோபம் மிகுந்து சுழலும்; குத்துக்கோற்காரரைக் கொல்லும்; பாகரைத் தூக்கி எறியும்; காலிற் சங்கிலியைப் பிணித்திருக்கும் கட்டுத்தறியை முறிக்கும். தேர்ப் படை, காற்றைப் பிளந்து ஞாயிற்றை அடைய விரும்பிப் பறக்கும் அன்னச்சேவலை ஒத்த வெண் ணிறக் குதிரைகள் பூட்டப்பெற்றுக், காற்றெனக் கடுகிச் செல்லும் தேர்களை உடையது. குதிரைப் படை, வட்டமாகவும் நேராகவும் ஓடும் விரைந்த செல்வினை உடையது. காலாட்படை, கள் உண்டு மயங்கி யானைபோல் செல்லும் வீரர்களை உடையது.

---

* பழங்காலத்தில் விலங்குக் காட்சிசாலை இருந்ததாகக் கொள்ளலாம்.

**ஊர்காப்பாளர் இயல்பு :**

நகர் காவலர் புலி போல் வீரமுடையவர்; துயில் கொள்ளாத கண்களை உடையவர்; அஞ்சாத நெஞ்சினை உடையவர்; களவுத் தொழிலைக் கண்டறியும் நுண்ணறிவு வாய்ந்தவர்; குறி தப்பாத அம்பினைக் கொண்டவர். அன்னார் கறுத்த உடலினர்; கரிய உடையினர்; வாள் கைக்கொண்ட கையினர்; மெல்லிய நூலேணி சுற்றிய அரையினர்; விழித்த கண் இமைக்குமுன் மறைந்தோடும் கள்வரையும் கடிதிற் பிடிக்கும் ஆற்றல் உடையவர்; தெருக்களில் நீர் பெருகியோடும் காரிருள் மூடிய யாமங்களிலும் நகரைச் சுற்றிவரும் இயல்பினர்.

**அறங்கூறவையம் :**

அறங்கூறும் அவையத்தில் துலாக்கோல் போன்று நடுவுநிலையினின்று அறங்கூறுந் தன்மையுடையார் இருப்பர். அவர்கள் அறநூலைக் கூறுந் திறனுடையவர்; ஒரு கூற்றில் பகைமையும், ஒரு கூற்றில் உவகையும் செய்யாமல் நடுநிற்கும் இயல்பு அமைந்தவர்; நடுவாகக் கூறுவாரோ, கூறுரோ என்று அஞ்சி வ்ந்தவர்களின் அச்சத்தையும் வருத்தத்தையும் போக்கி, அவர்கள் உள்ளங் கொள்ளுமாறு அறத்தினை எடுத்துரைக்கும் இயல்பும் அமைந்தவர்.

**அறக்கூழ்ச்சாலை :**

பாண்டியனுடைய கோநகரில் அறக்கூழ்ச் சாலையும் அமைந்திருந்தது. அங்குப் பலாப் பழத்தின் சுளைகளையும், இனிய மாம்பழங்களையும், பாகற்காய், வாழைக்காய், வழுதுணங்காய் முதலிய காய்களையும், வாழைப்பழம் முந்திரிப்பழம் முதலிய

பழங்களையும், இலைக்கறிகளையும் கண்டசருக்கரைத் தேற்றையும், இறைச்சிகளை உடைய சோற்றையும், கிழங்குகளையும், இனிய பாற்சோறு, பால் முதலியவைகளையும் வறியவர்களுக்கு வழங்குவர்.

**மைந்தரும் மகளிரும் :**

செல்வர் பூத்தொழில் அமைந்த பட்டாடைகளை மாலைக் காலத்தில் உடுத்திருப்பர்; அரையில் உடைவாளைச் செருகி இருப்பர்; தோளிலே மேலாடை அணிந்திருப்பர். அவர்கள் உடலில் தடவியிருக்கும் புனுகு முதலியவற்றின் நறுமணம் தெருக்களில் கமழும். அச்செல்வர்கள் காலாட்கள் சூழ்ந்துவரக் குதிரைகள் பூட்டிய தேர்களில் செல்வர்.

மகளிர் பொன்னுபரணங்களையும், வளைகளையும், சிலம்புகளையும் அணிந்திருப்பர். அவர்களின் முகங்கள் மதியை ஒத்து மறுவின்றித் தோன்றும். அவர்கள் மாடங்கள்தோறும் நிலாமுற்றங்களில் நின்று விழாவினைக் காண்பர். மாடங்களில் கட்டியுள்ள கொடிகள் அவர்கள் முகங்களை மறைக்கும். காற்றடிக்கும்போது கொடிகளின் அசைவால், அவர்களின் முகங்கள் வெளிப்பட்டுத் தோன்றும். இங்ஙனம் முகங்கள் ஒருகால் தோன்றியும் ஒருகால் மறைந்தும் காணப்படுவது, மேகங்களின் இடையே மறையும் திங்களைப்போன்று காணப்படும்.

**மன்னனும் மாதேவியும் :**

பாண்டியன் தன் கோநகராகிய மதுரை மாநகரிலிருந்து செங்கோல் செலுத்தி வந்தான். அவன், மகளிர் பொன் வட்டில்களில் மதுவினைக் கொடுக்க

அதனை அருந்துவான்; தூங்குமாலைகள் தொங்கும் படுக்கையில் துயில் கொள்வான்; வைகறை யாமத்தில் துயில் எழுவான்; எழுந்து காலைக் கடன்களை முடிப்பான்; மார்பிலே மாலை அணிவான்; கையிலே வீரவளையை அணிவான்; விரலிலே கணையாழியைச் செறிப்பான்; கஞ்சியிட்ட துகிலை உடுப்பான்; அதன் மேல் அணியும் அணிகலன்களை அணிந்து, நாளோலக்க மண்டபத்தில் வீற்றிருப்பான்.

ஏனாதிப் பட்டம் முதலிய சிறப்பினைப் பெற்ற படைத்தலைவர், அவனது வெற்றித் திறத்தை வாழ்த்துவர். பின்பு, அவன் தனது வெற்றிக்கு உதவிய வீரர்களை யெல்லாம் அழைப்பான்; அழைத்து, அவரவர் தகுதிக்கு ஏற்பப் பரிசில்கள் அளிப்பான்; பாவலர், பாணர், பாடினியர் ஆகியவர்களையும் அழைப்பான்; அவர்களுக்கு யானை, தேர் போன்ற பரிசில்களை வழங்குவான். அவனது நாட்டில் வாழும் மக்கள் செல்வ வளத்தினைப் பெற்றவர்.

அரசமாதேவி சிறந்த கற்பினை உடையவள்; மலர்ந்த செந்தாமரை போன்ற முகத்தினை உடையவள்; மாந்தளிர் போன்ற நிறத்தினைப் பெற்றவள்; மகரக் குழை பொருந்திய காதினை உடையவள்; மணிகள் பதிக்கப்பெற்ற பொன்னணிகளை அணிந்தவள்; வளைகளையும் அணிந்தவள்.

## நெடுநல்வாடையில் மதுரை

**நெடுநல்வாடை :**

நக்கீரர் இயற்றியருளிய நெடுநல்வாடையும் பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றாகும். அதனில்

பாண்டிய மன்னனுடைய அரண்மனையின் அமைப்பு விளக்கமாகக் காணப்பெறுகின்றது; மதுரை மூதூரின் மனைகளின் இயல்புகளும், மதில் வாயில் ஆகியவற்றின் தன்மைகளும் பிறவும் நன்கு கூறப்பட்டுள்ளன.

**மாலைக்காலம் :**

மிலேச்சர், மாலையினையும் வலியினையுடைய தோளினையும், முறுக்குண்ட உடம்பினையும், மெய் வலியினையும் உடையவர். அன்னார், முன்னும் பின்னும் தொங்கலாகத் தொங்கவிடப்பட்ட துகிலினையும் உடையவர். அவர்கள் மாடங்கள் உயர்ந்த மதுரை மூதூரில், ஆறு கிடந்தாற் போன்ற அகன்ற தெருக்களிலே திரிந்து வந்தனர். மகளிர், பூந்தட்டில் இட்டு வைத்த பிச்சிப்பூ மலர்தலால், அந்திக் காலத்தின் வரவை அறிந்து தகளியில் உள்ள நெய் தோய்ந்த திரியைக் கொளுத்துவர்; நெல்லையும் மலரையும் தூவித் தெய்வத்தை வணங்குவர். வளப்பம் பொருந்திய அங்காடித் தெருவில் உள்ள மக்கள் அம்மாலைக் காலத்தைக் கொண்டாடுவர்.

**மனைகளின் இயல்பு :**

மனைகள் காவல் பொருந்தியவை. அம்மனைகளில் குற்றேவல் வினைஞர் சாந்தரைக்கும் அம்மியில் கத்தூரி முதலியவற்றை அரைப்பர்; விறகில் நெருப்பை உண்டாக்கி, அகிலும் கண்ட சருக்கரையும் கூட்டிப் புகைப்பர்; சிறந்த நிறத்தையுடைய ஆலவட்டம், வளைந்த முளைக்கோலில் தூங்கும். தென்றல்-காற்றைத் தரும் சாலேகங்

களும் அம்மனைகளிலே அமைந்திருந்தன. இரண்டு கதவுகளும் சிக்கென்ற நிலையினை உடையனவாகத் தம்முட் பொருந்தும் இயல்பும், தாழிடும் தன்மையும் உடையன.

**மதில் வாயில் :**

சிற்ப நூல் வல்ல தச்சர், அரசர்க்கு ஒப்ப மனைகளையும், வாயில்களையும், மண்டபங்களையும் கூறுபடுத்தி அமைத்தனர். மதில் வாயில் இவ்விடங்களையெல்லாம் அகப்படுத்திக் கொண்டு விளங்கிற்று. கோபுர வாயில்கள் மலையை நடுவே வெளியாகத் திறந்தாற் போன்று காணப்பட்டன. அவை வென்றிக் கொடிகளையும், யானைகள் சென்று புகும் இயல்பையும் உடையன. அக்கோபுர வாயில்களில் கதவுகள் பொருந்தி இருந்தன. அவை சாதிலிங்கம் வழிக்கப்பட்டுத் தாழ் பொருத்தப்பட்டு, இரண்டாக மாட்சிமைப்பட்டு விளங்கின. நடுவில் திருவும், இருபுறத்தும் இரண்டு செங்கழுநீர்ப் பூவும், இரண்டு கைப்பிடியும் கொண்டனவாக வகுக்கப்பட்ட உத்தரக் கற்கவி இருந்தது. கைத்தொழில் வல்ல தச்சனால் செய்யப்பெற்ற நெடிய நிலையும் அமைந்திருந்தது. அந்நிலை, கற்கவியிலே செருகப் பெற்றிருந்தது. அந்நிலையில் வெண்சிறு கடுகும், நெய்யும் அணியப் பெற்றிருந்தன.

**அரண்மனை :**

அரண்மனை கவரி மாவும் அன்னமும் தாவித் திரியும் முன்பினைப் பெற்றிருந்தது; புதிதாகக் கொண்டு வந்து இடப்பெற்ற மணல் பொருந்திய முற்றத்தை உடையது. குதிரைகள் புல்லாகிய

உணவைக் குதட்டி எழுப்புகின்ற ஓசை பொருந்தி யது; நிலா முற்றத்து நீர் அருவி போன்று விழும் ஓசையும், மயில் ஆரவாரிக்கும் தன்மையும் உடையது.

கருவறை (தாய்வீடு) நீலமணி போன்ற தூண்களை உடையது; செம்பினால் செய்தது போன்ற தொழில்கள் செய்யப் பெற்ற நெடிய சுவர்களையும் உடையது. சுவர்களில் வெள்ளியை ஒத்த வெண் மையான சாந்து பூசப்பெற்றிருந்தது; பல இடங் களில் பல பூக்களையுடைய வல்லி சாதியாகிய கொடிகள் எழுதப்பெற்றிருந்தன. அங்கு மலையைச் சேர்ந்து இந்திரவில் கிடந்தது போன்று, பல நிறங் களை உடைய கொடிகள் காணப்பெற்றன. அங்கே யவனர்களால் தகளியினைத் தம் கையில் ஏந்திய வாறு செய்யப் பெற்ற பாவைகளும் (பாவை விளக்குகள்) காணப்பட்டன. பல இடங்களிலும் பரந்த இருள் நீங்கும்படி அவற்றில் நெய் வார்த் துத் தூண்டுகின்ற காட்சிக்கினிய நல்ல இல்லாக அது விளங்கிற்று.

**கட்டிலின் அமைப்பு :**

அவ்வரண்மனையில் உள்ள கட்டில் தந்தத்தால் செய்யப்பட்ட வட்டக் கட்டிலாகும். இது, தச்சன் தனது சிற்றுளியால் செய்த இலைத் தொழிலை இடையே இட்டு வைக்கப்பெற்றது; சிங்கம் முதலிய வற்றை வேட்டையாடும் தொழில்கள் பொறித்த தகடுகளையும், முல்லைப் பூக்களையும், ஏனைய பூக்களை யும் வரிசையாகச் செய்து வைக்கப் பெற்றது; சாளரங்களாகத் திறந்த தகடுகளை ஆணிகளிலே

தைத்துச் செய்த மூட்டுவாய் மாட்சிமைப்பட்ட அமைப்பையும் உடையது. இத்தகைய அழகிய கட்டிலைச் சூழ்ந்து முத்து வடங்கள் தொங்கவிடப் பட்டிருந்தன. பொலிவு பெற்ற நிறம் பொருந்திய கச்சால் வெளியான நடுவிடம் மறையும்படி கோக்கப்பட்டிருந்தது. இக்கட்டில் பக்கம் உருண்டிருக்கும் குடத்தை உடையனவாகிய அடிகளையும் உடையது. இது கச்சுக்கட்டில் என்னும் பெயரை யுடைய பாண்டில் என்று கூறப்படும்.

**கோப்பெருந்தேவியின் நிலை :**

கோப்பெருந்தேவி வேலைப்பாடு கொண்ட கட்டிலில், மென்மையாக விரித்திருந்த படுக்கையில் படுத்திருந்தாள். அழகிய வேலைப்பாடு அமைந்த இக்கட்டிலோ, மென்மை வாய்ந்த படுக்கையோ அவளுக்கு இன்பத்தைத் தரவில்லை. அரசனைப் பிரிந்திருந்தமையால், அவள் துன்புற்று வருந்தினாள். அவள், நெற்றியில் உலறிக் கிடக்கும் மயிரினை உடையவள். மகரக் குழையணிந்த அவளது காது, இப்பொழுது வறிதே காணப்பட்டது. முன்பு பொன்னால் செய்த தொடிகள் முன்கையில் கிடந்து அசைந்தன; இப்பொழுது வலம்புரிச் சங்கால் ஆகிய வளைகள் கிடந்தன. அவளது விரலில் சிவந்த நிறமுடைய முடக்கு (நெளி) என்னும் மோதிரம் விளங்கியது. அவளுடைய அடிகளில் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பெறவில்லை; சிலம்பு முதலிய அணிகளும் அணியப் பெறவில்லை. கணவன் அரண்மனையில் இருக்கும்பொழுது அவள் பூத்தொழில் அமைந்த பட்டாடைகளை உடுப்பது வழக்கம்.

இப்பொழுதோ, அவள் நூலாற் செய்த மாசேறிய புட்வையினை அணிந்திருந்தாள்.

செவிலித்தாயர் அவளுடைய வருத்தத்தைப் போக்குமாறு இனிய உரைகளைக் கூறினர். அவை களாலும் அவளுடைய வருத்தம் தணியவில்லை. அரசமாதேவியின் பார்வையோ, கட்டிலின் மேற் கட்டியில் தீட்டப் பெற்றிருந்த ஓவியங்களின் மீது சென்றது. அங்கே திங்களோடு உரோகிணியும் ஒருசேர அமைந்திருந்த ஓவியத்தை அவள் கண்டாள்; ''திங்களைவிட்டுப் பிரியாதிருக்கும் உரோகிணியைப் போன்று, தலைவனைவிட்டுப் பிரியாதிருந்திலனே'' என்று எண்ணி நெட்டுயிர்ப் புக்கொண்டாள். அவளுடைய கண்களிலே முத்துப்போன்று நீர்த்துளிகள் பெருகின. அவள் அவற்றைத் தனது சிவந்த விரலால் எடுத்துத் தெறித்தாள். பேரழகு வாய்ந்த பணிப்பெண்கள் அரசமாதேவிக்கு உறக்கம் வருவதற்காக அவளுடைய மெல்லிய அடிகளை வருடினர்.

**வேந்தனின் செய்கை :**

நெடுஞ்செழியனோ, சேரசோழ மன்னர்களோடு மாறுபட்டுப் போர் நிகழ்த்துகின்றான். அவன் விழுப்புண்பட்டுப் பாசறையில் கிடக்கும் வீரர்களைக் கண்டு ஆறுதல் கூறும் பொருட்டுத் தான் இருக்கும் இடத்தினின்றும் புறப்பட்டான். வாடைக்காற்று அடிக்குந்தோறும் விளக்குகள் சாய்ந்த தலையினை உடையனவாகத் தெற்கு நோக்கி எரிந்தன. படைத்தலைவன் புண்பட்ட வீரர்களை அரசனுக்குக் காட்டிக்கொண்டே வந்தான். அரசன் இடத்

தோளினின்றும் நழுவி விழுந்த மேலாடையை இடப்பக்கத்தே அணைத்துக்கொண்டான். அவன் வாளை எடுப்பதன் பொருட்டுத் தோளில் வைத்த வலக்கையினை உடையான். அவன் நடுயாமத்தும் கண்ணுறங்காதவனாய்ப் புண்பட்ட வீரர்கள் மகிழும் வண்ணம் ஆறுதல் கூறிக்கொண்டே வந்தான்.

## பரிபாடலில் மதுரை மாநகரம்

**தமிழ் வையை :**

பரிபாடல் என்பது சங்கத் தொகை நூல்களுள் ஒன்று. இது பரிபாட்டு என்னும் பாவகையால் இயற்றப் பெற்றதாகலின் இப்பெயர் பெற்றது. இஃது ஓங்கு பரிபாடல் என்று சிறப்பிக்கப்பெற்ற பெருமை உடையது. இந்நூல் வையையாற்றின் பெருமையையும், அவ்யாற்றில் புதுநீர் வருங்கால் மதுரை மக்கள் மேற்கொள்ளும் நீர் விளையாட்டையும், அவர்களின் பிற இயல்புகளையும் இன்பந் தோன்றப் பகர்கின்றது.

நல்லந்துவனார், மையோடக் கோவனார் என்னும் புலவர் பெருமக்கள் வையையாற்றில் வெள்ளம் பெருகிவரும் இயல்பினை இனிமை தோன்றக் கூறுகின்றனர். பொதிகைமலைத் தலைவனாகிய பாண்டியனுக்குப் போர்க்களத்தில் பகைவர் திறையாகக் கொடுத்த யானைகள் பரந்திருத்தல்போல, மேகங்கள் பரந்திருந்தன. அவை கடலில் உள்ள நீரைப் பருகிப், பாண்டியனுடைய வெற்றி முரசங்கள் முழங்குவன போன்று முழங்கின. அவனுடைய படை வீரர் விடுக்கின்ற அம்புகளை

ஒப்ப அவைகள் நீர்த்துளிகளைச் சிந்தின. பின்பு, அப்பாண்டியனுடைய ஈகைத்திறம்போன்று அவை சைலமலையிலே மிக்க மழையைப் பொழிந்தன. அதனால் நிலத்தையே மறைப்பது போன்று மிக்கநீர் இடந்தோறும் பெருகிற்று. அந்நீர் மலையிலுள்ள விலங்கினங்கள் கலங்கவும், மயில்கள் மகிழ்ச்சியால் அகவவும், மலையின்கண் உள்ள மாசுகள் நீங்கவும், அருவியாய் இழிந்தது. புலவர்கள் புகழ்ந்து பாடிய பாக்கள் பொய்யாவண்ணம், உழவு முதலிய தொழில்கள் பெருகும்படி அத்தண்புனல் பரந்து சென்றது. அருவிகள் இரவென்றும் பகலென்றும் பாராது பாய்ந்து சென்றன, அவை சென்ற தோற்றம், ஒரு நாட்டைக் கொள்ளக் கருதிச் செல்லும் பாண்டிய மன்னனுடைய படையின் அணிவகுப்புத் தலை நிமிர்ந்து செல்லுவது போலக் காணப்பெற்றது.

அப்புனல், நாடுகள் அழகு பெறவும், வயல்கள் வளம் பெருகவும் வையையாற்றிலே பொலிவோடு வந்தது. அது தன்மீது மலர்களைப் பரப்பிக் கொண்டு வந்தது; நாகம், அகில், சுரபுன்னை, ஞெமை, சந்தனம் ஆகிய மரங்கள் வருந்துமாறு அவைகளைத் தாக்கியது; தகரம், ஞாழல், அரிதாரம் போன்ற மரங்களைச் சாய்த்துத் தள்ளியது. வையையாற்றில் விரைந்து பெருகி வந்த நீரின் வரவு, பெருங்கடல் பொங்கி வருவது போன்று காணப் பட்டது.

இவ்யாற்றில் பெருகி வந்த நீர் பாண்டி நாட்டிலுள்ள வயல்களில் எல்லாம் பரந்தது. அந்நீர் வயல்களில் சென்று பரந்த தன்மை, பாண்டியனது

படை பகையரசனுடைய நாட்டில் சென்று புகுந்து தங்கியதைப் போன்று இருந்தது. தமிழ் வையையின் நீரானது பரந்து, மதுரைத் தெருவின்கண்ணும் ஓடிற்று. இங்ஙனம் பரந்து வந்த வையை நீரிலே, மதுரை மாநகர மக்கள் நீர்விளையாட்டினை மேற்கொண்டனர். நீராடுவோர் பூசியிருந்த மணப் பொருட்கள், சந்தனக் குழம்பு, குங்குமக் குழம்பு, புழுகு, நெய், பூக்கள் ஆகிய இவையனைத்தும் வெள்ளத்தில் கலந்தது. அதனால், அந்நீர் அப் பொருட்களின் மணத்தைப் பெறலாயிற்று.

வையைநீர் செந்நிலத்தில் பாய்ந்து வருதலால், அந்நீர் செந்நிறமும் அழகும் பெற்று விளங்கிற்று. அது மலையிடத்துள்ள மரங்களை வேரோடு பெயர்த்துத் தள்ளிக்கொண்டு வந்தது. மலையிலும், காட்டிலும் உள்ளனவாகிய பிறபொருட்களையும் அடித்துக் கொண்டு வந்தது; அவைகளை மருதம், நெய்தல் ஆகிய நிலங்களின் பள்ளங்களிலே பரப்பியது. அவ்வெள்ளம் ஆடல் வகையினை அறியாத அரிவை போன்று வேண்டிய இடங்களுக் கெல்லாம் சென்றது. வெள்ளம் வந்ததை அறிவிக்கும் பொருட்டு முழவும், பறையும் அறையப்பட்டன. நெற்பயிர்களிலும் நெற்போர்களிலும் வெள்ளம் வந்து பாய்ந்ததை அறிவிப்பதன் பொருட்டுத் துடி என்னும் பறையும் அறையப்பட்டது.

கமுகு, தென்னை ஆகிய மரங்களின் கழுத்தளவு வரை வெள்ளம் பெருகியமையால், வயல்களில் உள்ள வாளை மீன்கள் அவைகளின் பாளைகளை உண்டன. அவ்வெள்ளம் வெள்ளிமலை போன்ற நுரைக் கூட்டங்களைச் சுமந்து கொண்டு, பூக்களால் மூடப்

பெற்றுச், சோலைகளிலே பரந்து சென்றது. வையையில் பரந்த வெள்ளமானது மகளிருடைய கைவளை, தொய்யகம் என்னும் தலையணி, மேகலை, காஞ்சி எனப்படும் இடையணிகள், ஆடவர் அணிந்திருந்த மோதிரங்கள். தோள்வளை ஆகிய இவை அனைத்தையும் கவர்ந்து சென்றது. இச்செயலால் வையைப் புனல், பாண்டிய மன்னன் பகைவர் நாட்டில் புகுந்து, அவர்தம் பொருள்களைக் கவர்ந்து கொள்ளும் இயல்பினதாய் விளங்கிற்று.

வெள்ளத்தின் மேற்பரப்பில் போர்வையைப் போர்த்தியது போலப் பலவகை மலர்கள் படிந்து கிடந்தன. அந்நீர் ஆற்றங்கரையில் வளர்ந்திருந்த மாமரங்களின் தளிரையும், வாழை மரங்களின் இலைகளையும் கசக்கிக்கொண்டு, எல்லையற்ற ஓசையோடு கடலினைச் சென்று கூடிற்று. அப்பொழுது கரைகளைப் பாதுகாக்கும் காவலர்களை அழைப்பதன் பொருட்டுப் பறைகள் அறையப்பட்டன.

வையை வெள்ளத்தின் அலைகள் கரையின் கண் மிளகு முதலியவற்றை வீசும். அக்காட்சி, பாண்டிய மன்னன் தன்னிடமுள்ள பொருட்களை ஏழைகளுக்கு வாரி வாரி வழங்குவது போன்று தோன்றும். அவ்வலைகள் வையையில் உள்ள துறைகள்தோறும் முத்துமாலை முதலிய அணிகலன்களைக் கொண்டு வந்து ஒதுக்கும். புலவர்களுடைய கைகள் நிரம்பும் வண்ணம் பொன்னைச் சொரியும் பாண்டியனைப் போல, வையை வயல்களிலெல்லாம் பொன்னைப் பரப்பும். வையையாற்றினை அடுத்துள்ள வயல்கள், ஆடரங்கு போல அழகு பெற்றுத் தோன்றும். வையையாறு சோலைகளை வளம்பெறச் செய்தமை

யால், அச்சோலைகள் வையைக்கு நறுமணமலர்களை விருந்தாக அளிக்கும். மக்கள் வருந்தாவண்ணம் வையையில் வெள்ளம் வருவதனால், மதுரை மக்கள் அதற்கு விருந்து செய்வர். பாணரும், கூத்தரும், பிறரும் ஒருங்கு கூடி அதனைத் தொழுது ஏத்துவர்.

வையைக் கரையில் வளர்ந்திருந்த மரங்களில் உள்ள பூங்கொத்துக்களிலிருந்து உதிர்ந்த மலர்களும், நீராடிய மைந்தரும் மகளிரும் அணிந்திருந்த மலர்களும் வையை வெள்ளத்தில் பரவப் பெற்றுள்ளன. இதனால், வையையானது மீன்கள் பூத்து விளங்கும் வானில் பெருகியோடும் கங்கை யாற்றினைப் போன்று விளங்கிற்று. வையையின் வெள்ளம் மலர்மணம், தேன்மணம், காய்ந்த மண்ணின் மணம், கனியின் மணம் ஆகிய பல்வகை மணங்களோடும் வந்தது. குவிந்துள்ள காந்தள் முகைகளையும், மலர்ந்துள்ள காந்தள் மலர்களையும், குவளை முதலிய நீர்ப்பூக்களையும், கோட்டுப் பூக்களையும், நிலப்பூக்களையும், கொடிப்பூக்களையும் தள்ளிக்கொண்டு வந்து மதிலின் கீழ் அமைக்கப் பட்டுள்ள சுருங்கையின் வழியாகப் பாய்ந்தது. இக்காட்சி, களிறு தன் துதிக்கையினைத் தூக்கி நீரைச் சொரிவது போன்று தோன்றிற்று.

வையையில் கலங்கி ஓடும் நீர், பின் மிகத் தெளிந்து, கல்லணைக்குள் தேங்கி நின்று வானுலகின் அழகையும் தன்மாட்டு நிழலுருவில் காட்டும். காலைப்பொழுதில் பலரும் நீராடலால், அந்நீர் கலங்கிச் செங்குருதி போன்று தோன்றும்.

வையையில் நீர் பெருகும்போது வளர்பிறை போன்று பெருகும். நீர் சுருங்கும்போது நிறைமதி நாளுக்குநாள் தேய்வது போன்று சுருங்கும். இருள்மதி போன்று நீர் முற்றும் வற்றுதல் என்பது இல்லை; எட்டாம் நாள் பிறைமதி போன்று பாதி யளவு நீர் ஓடிக்கொண்டே இருக்கும். வையையில் கார் காலத்தில் நீரானது கலங்கிவரும்; இளவேனிற் காலத்தில் தெளிவாக இருக்கும். அப்பொழுது தேவர்கள் வானில் ஊர்ந்து செல்லும் விமானங்கள், அந்நீரில் தெளிவாகத் தெரியும்.

**மக்கள் நீராடச் சென்ற காட்சி :**

வையையாற்றுத் தண்ணம்புனல் மதுரைமா நகரத்து மதிலினை வந்து மோதியது. அப்பொழுது வையைப் புதுவெள்ளத்தில் நீராடும் வேட்கையால் மக்கள் திரண்டெழுந்தனர். அவர்கள் மெல்லிய காலணிகளை அணிந்தனர்; இடையில் மேகலையினை அணிந்தனர்; பீச்சாங்குழல் முதலிய கருவிகளையும், மணப்பொருட்கள் நிறைந்த பெட்டிகளையும் எடுத்துக்கொண்டனர். அவர்கள் பறவைபோன்று விரைந்து செல்லும் பரிகளின் மீதும், இனிமையாக இருக்கத் தகும் பிடிகளின் மீதும் ஏறினர்; எருதுகள் பூட்டிய வண்டிகளிலும், குதிரைகள் பூட்டிய சகடங்களிலும், அழகு செய்யப் பெற்ற பல்லக்கு களிலும் ஏறினர். இவ்வாறு ஏறிய இளமகளிரும், முதுபெண்டிரும், கற்புடை மகளிரும், அவர்தம் தோழியரும், பணியாட்களும் ஆகிய அனைவரும் ஊர் மக்களோடு சேர்ந்து ஆற்றை நோக்கிச் சென்றனர். அவர்களுடைய நடை, இசை வல்லுநர்

இசைக்கும் பல்வகை வாத்தியங்களின் மந்த கதியினை ஒத்திருந்தது.

இங்ஙனம் ஆண்களும், பெண்களும் ஊர்திகளில் ஏறிக் கூட்டம் கூட்டமாகச் சென்று வையைக் கரைகளில் திரண்டனர். மைந்தரும் மகளிரும் குதிரை, களிறு, கோவேறு கழுதை ஆகியவை மீது ஏறி வையையாற்றங் கரைகளிலும், அங்குள்ள பூஞ்சோலைகளிலும் நெருங்கித் திரண்டனர். கற்றோரும், கல்லாதவரும், கயவரும், பிள்ளைகளைப் பெற்றோரும், கற்புடை மகளிரும்,பாண்டிய மன்னனும் ஆகிய எல்லாரும் வையையைச் சூழ்ந்து கொண்டனர்.

வையைக் கரையை அடைந்த மகளிர் ஆற்று நீரின் அழகைக் கண்டு மகிழ்ந்து நின்றனர். பொருள்களை ஏற்றிக் கொண்டு வரும் மரக்கலம் கரையை வந்து அடையுங்கால், அதனை மகிழ்வோடு எதிர்கொள்ளும் வணிகரைப் போல, அவ்விளம் பெண்களும் வையைப் புனலை மகிழ்வோடு எதிர்கொண்டனர். சிலர் நீரணிமாடம் என்னும் ஓடங்களில் ஏறி அவற்றைச் செலுத்தி விளையாடினர்; சிலர் பரிகளின் மீது ஏறி அவற்றை நீருட் செலுத்தினர்; சிலர் பிடிகளின் மீது ஏறி அவற்றைச் செலுத்தலாயினர். அவர்கள் நீர் விளையாடல் புரியும் இடம், பாண்டிய மன்னனுடைய போர்க்களத்தை ஒத்திருந்தது.

இங்ஙனம் வையையாற்று நீரிலே மகளிர் உவகையோடு நீராடிக் களித்தனர். நீராடி இளைத்த மகளிர் கரையேறி நெருப்பில் அகில்

கட்டைகளை இட்டுப் புகைத்து, அப்புகையால் தம் கூந்தலின் ஈரத்தைப் போக்கினர்; கள்ளினைப் பருகிக் களித்தனர்; பொன்னால் செய்யப்பெற்ற சங்கு, நண்டு, இறால், வாளைமீன் ஆகியவற்றைப் புதுவெள்ளத்தில் வீசி எறிந்து வழிபாடாற்றினர்.

**பாண்டிய மன்னன் நீராடிய காட்சி:**

நீராடுவோர் தம்முள் பேசிக்கொள்ளும் பேச்சுக்கள் மதுரை மூதூரின் கண்ணே நிறைந்தன. நீர்விளையாட்டின் காரணமாக வானுலகமும் மதுரை மாநகருக்கு ஒவ்வாது பொலிவினை இழந்தது. பாண்டிய மன்னன் மக்களோடு வையையில் நீராடிய தன்மை, இந்திரன் தேவர்களோடு வானிலுள்ள கங்கையில் நீராடிய தன்மைத்தாக இருந்தது.

மாலைப்பொழுதிலே முழுமதி தோன்றியது. மைந்தரும், மகளிரும் ஆடிப்பாடிக் கொண்டு தத்தம் இல்லங்களை நோக்கித் திரும்பினர். அப்பொழுது, மதுரை மாநகரின் மணிமாடங்களிலிருந்து மகளிர் நறுமணங் கமழும் புகையினை எழுப்பினர்.

**திருவாதிரை விழா :**

மார்கழித் திங்களில் அந்தணர் திருவாதிரை விழாவினை இயற்றத் தொடங்கினர். அப்பொழுது கன்னிப்பெண்கள் தம் அன்னையரோடு தைந்நீராடினர். அன்னார் வையையை நோக்கிப் பலவாறு வேண்டிக்கொண்டனர்; பின்னர்க் கரையின்கண் முனிவர்கள் வளர்க்கும் வேள்வித் தீயிலே குளிர் காய்ந்தனர்.

**திருமருதமுன்றுறை :**

வையையாற்றில் அமைந்திருந்த துறைகளுள் சிறந்து விளங்கியது திருமருதமுன்றுறையாகும். ஆற்றில் வரும் வெள்ளம் பல்வகை மலர்களை அடித்துக் கொண்டு வந்து அத்துறையின்கண் சேர்த்தது. அதனால், அது மலர் மண்டபம் போன்றும், வையை என்னும் பெண்ணின் முன்தானை போன்றும், நிலமகளின் கழுத்தினைப் போன்றும் காணப்பட்டது. அங்கே முழவொலிக்கு மாறாக, இடியொலி ஒலிக்கும்; யாழ் ஒலிக்கு எதிராகச் சோலைகளிலே வண்டினங்கள் இசைக்கும்; புல்லாங் குழலின் இசைக்கு ஒப்பத் தும்பிகள் இசையினை எழுப்பும்; நடன மகளிரைப் போன்று பூங்கொடி கள் அசையும். அங்கே யாழ்ப்பாணர்களும் பாடுவர். இவ்வாறு பல்வகை நிகழ்ச்சிகளும் ஆங்கே நிகழ்ந்தன.

**இருந்தையூர் :**

இருந்தையூர் என்னும் திருப்பதி, வையை நீர்த்துறைகளுள் ஒன்றனைப் பொருந்தி இருப்பது. இப்பதியின் ஒருபால் நீலமணி போன்ற நிறங் கொண்ட மலை உள்ளது; மற்றொருபால், வானைப் போன்று பரந்த தன்மையுடைய குளம் உள்ளது; வேறொருபால் திருமகளும் விரும்பத்தக்க வயல்கள் உள்ளன; பிறிதொருபால், அறநெறியினின்றும் நீங்காத மக்கள் வாழும் நகரம் உள்ளது. இருந்தை யூரில் உள்ள திருமால் கோவில் சிறப்புடைய துறக்கத்தை ஒப்பதாகும். இஃது ஆதிசேடன் கோவிலாகப் போற்றப்படுகின்றது. குளவாய்

என்னும் இடத்தில் அமைந்திருந்த இக்கோவில் மிகவும் பழைமை உடையது.*

**மதுரை மாநகரின் மாண்பு :**

மதுரை மாநகரம் புலவர்களால் பாடப்பெற்ற பாடல்களைக் கொண்ட பெருமை பொருந்தியது. அது கல்வி, செல்வம், வீரம், போர், வென்றி, சான்ருண்மை, கற்புடைமை, கடவுள்தன்மை முதலிய பலவகைப் புகழ்களாலும் நிறைந்தது. அது, **'நீள் மாடக் கூடல்'** என்றும், **'பொலம் புரிசைக் கூடல்'** என்றும் போற்றப்பெற்ற பெருமை உடையது.

இத்தகைய பெருமையுடைய மதுரைப் பேரூர், திருமாலின் கொப்பூழில் மலர்ந்த தாமரைப் பூவினை ஒக்கும்; அவ்வூரின் தெருக்கள் அப்பூவின் அகவிதழ்களை ஒக்கும்; பாண்டியனுடைய அரண்மனை, அகவிதழ்களின் நடுவேயுள்ள பொகுட்டினை ஒக்கும். அந்நகரில் வாழும் தண்டமிழ்க் குடிமக்கள், அத்தாமரை மலரில் உள்ள மகரந்தப் பொடியினை ஒப்பர். அங்குள்ள பரிசில் வாழ்நர், அந்தத் தாதினை உண்ணும் வண்டுகளை ஒப்பர். சேரன் தலைநகராகிய வஞ்சியில் உள்ள மக்களும், சோழனின் கோநகராகிய உறையூரில் உள்ள மக்களும், விடியற்காலையில் கோழி கூவுவதனைக் கேட்டுத் துயில் எழுவர். ஆனல், மதுரை மாநகரில் வாழும் மக்கள், அங்ஙனம் கோழி கூவுவதனைக் கேட்டுத் துயில் எழார். அவர்கள் மறையினை ஓதும் அந்தணர்களின் மறையொலி கேட்டுத் துயில் எழுவர்.

---

* இஃது இக்கால மதுரையிலுள்ள கூடலழகர் கோவிலாக இருக்குமோ என்பது ஆராய்தற்குரியது.

மதுரையில் திருமண விழாவிலே மணமுரசின் ஒலி எழுந்தவண்ணம் இருக்கும். இம்மண முரசின் ஒலிக்கு எதிராகத் திருப்பரங்குன்றத்தின் ஒலியும் எதிரொலிக்கும். மதுரை நகர மக்கள் தத்தம் இல்லங்களில் தலைவர்கள் கொண்டுவந்த பெரும் பொருளால் விருந்தமைத்து அதனை விழாப்போலக் கொண்டாடுவர். அம்மக்கள் அறிவுத் திறமையும், படைக்கலத் திறமையும் உடையவர். அவர்கள் அறிவுப் போரோ படைக்கலப் போரோ நிகழ்த்தின் வெற்றியே பெறும் இயல்பினைக் கொண்டவர். அன்னார் விடியற்காலையில் குதிரைகளின்மீதும், தேர்களின்மீதும் ஏறித் திருப்பரங்குன்றம் செல்வர். அவர்கள் செல்லுங் காட்சி, இவ்வுலக மக்கள் அறச் செயலினைச் செய்து அதன் பயனை நுகர்வதற்குத் தேவருலகை நோக்கிச் செல்லும் காட்சி போன்று காணப்பட்டது. மதுரையினின்றுதிருப்பரங்குன்றம் செல்வதற்குப் பெருவழி அமைந்திருந்தது. அவ்வழி மணமிக்க மலர்ச் செடி கொடிகளையும், உயர்ந்த மரங்களையும், நெடுகிலும் சுனைகளையும் பொருந்தி யிருந்தது.

வையையில் புது வெள்ளம் வருங்கால், மதுரை நகர மாதர் புகைப் பொருள்களும், மலர்களும், புது வெள்ளத்தை வழிபடுவதற்கு உரிய பொருள்களும், பொன்மீன் முதலியனவும் ஏந்திக்கொண்டு மகிழ் வோடு செல்வர். இளைஞரும், இனிய மகளிரும் நீராடுவதற்கு ஏற்ற அணிகளை அணிந்து கொள்வர். அவர்கள் கரிகளின்மீதும், பரிகளின்மீதும் ஏறிக் கொண்டு போருக்குச் செல்லும் முன்னணிப் படை களைப் போன்று செல்வர். அவர்கள் துருத்திகளும்,

கொம்புகளும், வெண்கிடையாற் செய்யப்பெற்ற புணைகளும், தேர்களும் உடையவராவர்.

**பாண்டிய மன்னன் :**

பாண்டியன் பெருநிலம் முழுதாளும் முடிமன்னன். அவன் விரும்பத்தகும் பல பண்புகள் நிறைந்தவன்; அறிவால் மாட்சிமைப்பட்டவன்; தமக்குரிய கடமைகளை அறிந்து வினையாற்றும் அமைச்சர்களைப் பெற்றவன். அவன் சிற்றரசரால் சூழப்பட்ட மீனக்கொடி பறக்கும் தேரினை உடையவன்; தன் மனைவியரோடும் அமைச்சர்களோடும் நகர மக்களோடும் பரங்குன்றம் சென்று முருகப் பெருமானை வழிபடும் இயல்பும் உடையவன்.

அம்மன்னன் மிக்க கைவண்மை உடையவன்; ஏழைகளுக்குப் பொருள்களை வாரி வாரி வழங்கும் இயல்பு அமைந்தவன். புலவர்களுக்குப் பொன்னைச் சொரியும் மாண்பும் அமைந்தவன். அவன் போரில் பகைவரைக் கொல்லும் தானையை உடையவன்; முரசினையும், வேற்படையினையும், அம்பினையும் உடையவன்; பிறரை அடிபணிந்தறியாத சிறப்பும் உடையவன். மதுரை மாநகரம் அப்பாண்டியனுக்கு உரிமையுடையது. ஆதலின், அது 'பஞ்சவன் கூடல்' (பஞ்சவன்—பாண்டியன்) எனப் போற்றப் பட்டது.

## சிலப்பதிகாரத்திலே மதுரை, மாநகரம்

**சிலப்பதிகாரம்:**

சிலப்பதிகாரம் ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்றாக விளங்குவது. இது தேனினும் இனிய

தீந்தமிழ்ச் சுவையுடையது. இச்செந்தமிழ்க் காப்பியத்தைத்,

> "தேனிலே ஊறிய தீந்தமிழின்—சுவை
> தேரும் சிலப்பதிகாரம்".

என்று கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை பாராட்டியுள்ளார். புதுமைக்கவி பாரதியாரும்,

> "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்"

என்று போற்றியுள்ளார். இத்தீந்தமிழ்க் காப்பியம் மதுரை மாநகரினைக் குறித்து விரிவான செய்திகள் பலவற்றை விளம்புகின்றது.

**புறஞ்சேரி:**

புறஞ்சேரி புட்களால் அழகு பெற்று விளங்குகின்ற கழனிகளையும், ஏரிகளையும், பண்ணைகளையும் உடையது; சோலைகளையும் உடையது; தெங்கு, கமுகு, வாழை முதலியன செறிந்து திகழ்வது. அங்கு மூங்கில் திரள்களாலான தண்ணீர்ப் பந்தல்கள் காணப்பட்டன. அப்புறஞ்சேரியில் தவம் செய்வோர் பலர் உறைந்து வந்தனர். அவர்களுடைய பள்ளி பொழிலிடத்தே அமைந்திருந்தது. இல்லற நெறிக்கண் நின்றோர் அங்கு வாழ்வது இல்லை. அங்கு இயக்கி என்னும் தெய்வத்திற்குக் கோவில் இருந்தது. அத்தெய்வத்திற்கு மக்கள் பாற்சோறு படைத்து வழிபடுவது வழக்கம்.

**காவற்காடும் அகழியும்:**

மதுரை மாநகரம் அழித்தற்கு அரிய அரண் சூழ்ந்த காவற் காட்டினை உடையது. அதனை

அடுத்து நகரைச் சூழ்ந்து ஆழமான நீர் பொருந்திய அகழி இருந்தது. அங்கே குவளையும், ஆம்பலும், கமலமும் காணப்பட்டன. யானைக் கூட்டங்கள் அகழிக்குப் போவதற்கு ஏற்றவாறு சுருங்கை வழியும் அமைந்திருந்தது.

**கோட்டை மதில்:**

நகரைச் சூழ்ந்து உயரமான கோட்டைமதில் காணப்பட்டது. அது மாற்றார் போர்த்தொழிலில் வெற்றிகொள்வதற்கு அருமையானது. அம்மதிலின் மீது காற்றில் அசைந்தாடிக் கொண்டிருக்கும் நெடிய கொடிகள் காணப்பட்டன. அம்மதிலானது கொடி அசையும் வாயிலையும், யவனரால் காக்கப் படும் காவல் தொழில் அமைந்த சிறப்பினையும் உடையது.

அம்மதிலில் வளைந்து தானே எய்யும் எந்திர வில்லும், கரிய விரலையுடைய குரங்கு போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும், கல்லை உமிழும் கவணும், காய்ந்து இறைத்தலால் சேர்ந்தாரை வருத்தும் நெய்யும், செம்பை உருக்கும் மிடாவும், உருகக் காய்ச்சி எறிதற்கு எஃகுபட்டிருக்கும் உலை களும், இடங்கணிப் பொறிக்குக் கல்லை இட்டு வைக்கும் கூடையும் ஆகிய பல்வகைப் பொறிகள் அமைந்திருந்தன. மதிலினைப் பற்றுவாரைக் கோத்து வலிக்கும் கருவியும், கழுக்கோல் போலக் கழுத்தில் பூட்டி முறுக்கும் சங்கிலியும், ஆண்டலைப் புள் வடிவாகச் செய்து பறக்கவிட, உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் பொறிநிரைகளும் அம்மதிலில் அமைந்திருந்தன. மேலும், கிடங்கில்

ஏறின் மறியத் தள்ளும் இரும்புக் கவையும், கழுக் கோலும், அம்புக் கட்டும், ஏவறைகளும், கதவை அணுகாதபடி தொங்க விடப்பட்ட விட்டமும் காணப்பெற்றன. மதில் உச்சியைப் பற்றுவார் கையினைப் பொதுக்கும் ஊசிப்பொறிகளும், பகைவர் மேல் சென்று கண்ணைக் கொத்தும் சிச்சிலிப் பொறியும், மதில் உச்சியை அடைந்தவர்களுடைய உடலைக் கோட்டால் கிழிப்பதற்குத் தக்கவாறு இரும்பால் செய்து வைத்த பன்றிப் பொறியும், மூங்கில் வடிவாகச் செய்து அடித்தற்கு அமைத்த பொறியும் அமைக்கப்பட்டிருந்தன. கதவுக்கு வலியாக உள்வாயில் படியிலே நிலத்தில் விழும் படியாக விடப்பட்ட மரங்களும், கணையமரமும், தோலும் குந்தமும், ஈட்டி முதலியனவும் அமைக்கப் பட்டிருந்தன. சதக்கினி, தள்ளிவெட்டி, களிற்றுப் பொறி, விழுங்கும் பாம்பு, கழுகுப்பொறி, புலிப் பொறி, குடப்பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூல்பொறி, குருவித்தலைகள் முதலியனவாகப் பல பொறிவகைகளும் பொருத்தப்பட்டிருந்தன.

**வையையாறு :**

வையையாற்றங் கரையின் வெளியிட மெங்கும் குரவம், மகிழ், கோங்கு, வேங்கை, வெண்கடம்பு, சுரபுன்னை, மஞ்சாடி, மருது, செருந்தி, சண்பகம், பாதிரி ஆகியவைகளின் மலர்கள் சூழ்ந்து காணப் பட்டன. அவை, வையை என்னும் பெண்கொடி உடுத்திக்கொண்ட பூந்துகிலைப்போன்று இருந்தன. கரைகளில் உள்ளிடம் எங்கும் குருக்கத்தி, செம் முல்லை, முசுட்டை, மோசி மல்லிகை, வெள்ளை நறுந்தாளி, வெட்பாலை, மூங்கில், குட்டிப் பிடவம்,

இருவாட்சி ஆகியவை நெருங்கி மலர்ந்திருந்தன. அவை, அம்மங்கை நல்லாளின் மேகலை போன்று காணப்பட்டன.

அம்மங்கை நல்லாள், கரையில் நின்ற முருக்கு மரம் உதிர்த்த சிவந்த இதழாகிய வாயினைஉடையவள்; அருவி நீரில் கலந்து வந்த முல்லை அரும்புகளாகிய பற்களை உடையவள்; குறுக்கே மறிந்தும், நெடுக ஓடியுந் திரியும் கயல்களாகிய கண்களை உடையவள்; திரைகள் அரித்த அறலாகிய கூந்தலையுடையவள்; உலகைப் பாதுகாத்தற் பொருட்டுப் பல பொருட்களையும் விளைவிக்கும் பெரிய ஒழுக்கத்தினை உடையவள்.

> " புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
> வையை என்ற பொய்யாக் குலக்கொடி "

என்பது இளங்கோ அடிகளின் திருவாக்கு. கரைகளிலே நின்ற மரஞ் செடி கொடிகளின் மலர்கள் உதிர்ந்து, வையையாற்றின் நீர் தெரியாதபடி மூடிக்கொண்டு சென்றன. அதனால் அது,

> " புனல்யா றன்றிது பூம்புனல் யாறென., "

என்னும் போற்றுதலைப் பெறலாயிற்று.

வையை ஆற்றினைக் கடப்பதற்கு ஓடங்களும், மரப்புணைகளும் பயன்படுத்தப்பட்டன. ஓடங்களுள், குதிரைமுக ஓடம், யானைமுக ஓடம், சிங்கமுக ஓடம் எனப் பலவகைகள் இருந்தன. ஓடக் கோலுக்கும் நிலைத்தற்கு அரிய ஆழமான துறைகளில் செல்வோர், இவ்வோடங்களில் ஏறிச் சென்று ஆற்றினைக் கடப்பர்; பிற இடங்களில்

தெப்பங்களில் ஏறிச் சென்று ஆற்றினைக் கடப்பர். கோவலனும் கண்ணகியும் மரப்புணை ஒன்றில் ஏறி வையை யாற்றைக் கடந்து சென்று தென்கரையை அடைந்தனர்.

மதுரைத் தென்றலின் மாண்பு :

மதுரைத் தென்றல், அகில் சாந்தும், குங்குமக் குழம்பும், நாவிக் குழம்பும், சந்தனச் சாந்தும், கத்தூரிச் சாந்துமாகிய தெய்வ மணம் கமழும் சேற்றை அளைந்து வரும் இயல்புடையது. கழுநீர் மலர், சண்பகமலர் என்னும் இவற்றால் ஆகிய மாலை யுடன், குருக்கத்தியும், மல்லிகையும், முல்லையும் என்னும் பூக்களால் ஆகிய அணையிலே பொருந்தி யது. அடுக்களையினின்று தாளிப்பு முதலிய வற்றால் எழும் புகையும், அப்பவாணிகர் அப்பம் சுடு தலால் எழும் புகையும், மைந்தரும் மகளிரும் எடுத்த லால் எழும் அகில் புகையும், வேள்விச் சாலைகளி னின்று எழும் புகையும் ஆகிய பல்வேறுபட்ட புகைகள் கலந்து வரும் தன்மையுடையது. பாண்டி மன்னனுடைய அரண்மனையினின்று வரும் நறு மணமும் கலந்து வருவது. அது சங்கப் புலவர் களால் புகழப் பெற்ற சிறப்புக்களையும் உடையது. அது பொதியத் தென்றலும் தன்னை ஒவ்வாமைக் குக் காரணமாகிய மதுரைத் தென்றலாகும்.

அகநகரின் சிறப்பு :

அகநகர் இந்திரனுடைய மணிகள் இழைத்துப் செய்த அணிகலன்கள் வைக்கப்பெற்ற பணிச் பெட்டகத்தைத் திறந்து வைத்தது போன்ற மதில் வட்டத்தையுடைய அழகுடையது. கடவுளது

கோவிலிடத்தும், அரசனுடைய அரண்மனை யிடத்தும் ஒலிக்கும் காலை முரசத்தின் ஒலியும், அந்தணர் நான்மறை ஓதும் ஓசையும், மாதவர் மந்திரம் ஓதுதலால் எழும் ஓசையும், வாள்வீரர் தத்தம் வீரத்திற்கு எடுத்த முரசத்தின் ஓசையும் பொருந்தியது. போர்க் களிற்றின் முழக்கமும், காட்டினின்று பிடித்துக்கொண்டு வந்த யானையின் முழக்கமும், குதிரைகள் போர் நினைந்து ஆலிக்கும் ஓசையும், மள்ளர் வைகறைப் பொழுதில் கிணைப் பறைகளைக் கொட்டும் ஓசையும் ஆகிய பல்வகை ஓசைகளும் பொருந்தியது. சிவபெருமான் கோவில், திருமால் கோவில், பலதேவர் கோவில், முருகன் கோவில் ஆகியவைகளிலும், அறவோர் பள்ளி களிலும், மன்னவன் அரண்மனையிலும் காலைமுரசம் வெண்சங்கின் ஓசையோடும், ஊதுகொம்பின் ஓசை யோடும் ஒலிக்கும்.

மதுரை மாநகரில் நெற்றிக் கண்ணையுடைய இறையோன் திருக்கோவிலும், திருமால் கோவிலும், பலதேவர் கோவிலும் விளங்கி இருந்தன. அங்கே ஐயை (துர்க்கை) கோவிலும் இருந்தது. மதுராபதி என்னும் தெய்வமும் இருந்தது. நகரிகாவல் தெய்வ மாகிய நான்குவருணப் பூதங்களும் காணப்பட்டன. அறத்தை விளக்கும் அறவோருடைய பள்ளிகளும், மறத்தை விளக்கும் மன்னவன் கோவிலும் ஆங்கே அமைந்திருந்தன.

அங்காடி வீதிகள் :

அங்காடித்தெரு அரசரும் காண்டற்கு விரும்பும் செல்வ வளத்தை உடையது. அங்கே வையமும்,

தேர்வட்டையும், தேர்மொட்டும், கவசமும், அங்குசமும் விற்கும் கடைகள் இருந்தன. கவரியும், கடகும், குத்துக்கோல்களும் விற்கும் கடைகளும் இருந்தன. மாலைக்காலத்தில் புனைவதற்கு உரிய பொருட்களை விற்பனை செய்யும் கடைகளும் காணப்பட்டன. ஈர்வாள் முதலிய கருவிகளையும், ஆனைக்கோடு முதலியவற்றைக் கடையும் தொழிற்கு உரிய கருவிகளையும் விற்பனை செய்யும் கடைகளும் காணப்பட்டன. அகிற்புகை, மயிர்ச்சாந்து இவைகட்குரிய பொருட்களை விற்கும் கடைகளும், மாலைகள் முதலியன விற்பனை செய்யும் கடைகளும் இருந்தன. இவை அனைத்தும் பெரிய கடைகளாக விளங்கித் திகழ்ந்தன.

ஒளியுடைய வயிரங்களும், மரகதங்களும், மாணிக்க வகைகளும், புருடராக வகைகளும், வயிடூரிய வகைகளும், நீலமணிச் சாதிகளும், கோமேதகச் சாதிகளும், கொடிப்பவளச் சாதிகளும் விற்பனை செய்யும் இரத்தினக் கடைத் தெருவும் இருந்தது. சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்னும் நால்வகைச் சாதிப்பொன்னை விற்பனை செய்யும் பொற்கடைகளும் இருந்தன. 'இவ்விடத்து இப்பொன் உள்ளது' என அறிவிக்கும் கொடிகளும் இக்கடைகளில் கட்டப்பெற்றிருந்தன. பருத்திநூலாலும், எலிமயிராலும், பட்டுநூலாலும், நெய்யப்பெற்ற துகில்வகைகள் பொருந்திய அறுவை வீதியும், பெரிய மிளகுப் பொதியும், பாக்கும், வேறு பண்டப் பொதிகளும் பதினெட்டு வகைத்தாகிய கூலங்களும் குவித்த கூலவீதியும் இருந்தன.

அகநகரில், செழுங்குடிச் செல்வர்களோடு அரசரும் விரும்பும் வீதிகள் பல அமைந்திருந்தன. அறுபத்து நான்கு கலைகளில் வல்லார் வீதிகளும் அங்கே அமைந்திருந்தன. அரசர் வீதியும், அந்தணர் வீதியும், வணிகர், வேளாளர் தெருக்களும் வேறுவேருக விளங்கித் திகழ்ந்தன. தளிப் பெண்டுகள் (கோவிலில் பணிபுரியும் மகளிர்) தெருவும் இருந்தது. அங்கே ஆயர் தெருவும் அமைந்திருந்தது.

அவ்வகநகரிலே தேரோடும் வீதிகளும், ஆவண வீதி எனப்படும் கோவில் அங்காடியும் (கோவில் கடை) விளக்கமுற்றிருந்தன. முச்சந்திகளும், நாற்சந்திகளும், மன்றிடங்களும் காணப்பட்டன. அவ்விடத்தில் கட்டப்பெற்ற கொடியும், பதாகையும் பந்தல் இட்டாற் போன்று நிழலைச் செய்தன.

மக்களின் பொழுது போக்கு:

மாடங்களில் எடுத்த கொடிகள் அசையும் மறுகின்கண்ணே பொதுமகளிர் வாழ்ந்து வந்தனர். அன்னுர் வையையில் உள்ள திருமருதந்துறைக்குச் சென்று நாவாய் முதலியவற்றைச் செலுத்தியும், புணைகளைத் தழுவி நீந்தியும் புனல் விளையாட்டை மேற்கொள்வர். இது, காலையில் அவர்கள் பொழுது போக்கும் முறையாகும். அவர்கள் நண்பகற் பொழுதில் பொழில் விளையாட்டை மேற்கொள்வர். முல்லை மலரும், குவளை மலரும், நெய்தல் மலரும் தம் கொண்டைகளில் செருகி இருப்பர். மல்லிகை, செங்கழுநீர் ஆகியவைகளால் செய்த மாலையைக் கொற்கைத்துறை முத்துக்களால் செய்த

வடத்தோடு பூண்டிருப்பர். சந்தனக் குழம்பை மேனி முழுதும் பூசி, இலவந்திகைச் சோலைகளில் விளையாட்டை விரும்புவர். கதிரவன் மறையும் வேளையில் அங்கிருந்து மீண்டும் இளநிலா பொழியும் முன்றிலில் இனிமையாகத் தங்குவர்.

மதுரை மூதூரில் சிற்ப நூல் வல்லோரால் சிறப்பாகக் கட்டப்பெற்ற உயர்ந்த மாடங்கள் இருந்தன. அவை குறுகிய கண்களையுடைய சாளரங்களை உடையன. அம்மாடங்களில் கூதிர் காலத்தில் மகளிர் தடாக்களில் அகிலாகிய விறகை இட்டு நெருப்புக் காய்வர். முன்பனிக் காலத்தில் மகளிரும், மைந்தரும் வளமனையில் உள்ள இளநிலா முன்றிலில் இருந்து, இளவெயிலை நுகர்வர். பின்பனிக் காலத்தில் பங்குனித் திங்களின் இறுதியில் காமவேளுடைய வெற்றி விழா சிறப்பாகக் கொண்டாடப்பெறும்.* அரசர் விளையாடும் காவற்சோலையும் கூடற்கண்ணே அமைந்திருந்தது. நீராவிச்சோலையில் மன்னன் விளையாடி மகிழ்வதும் உண்டு.

பொற்றகடு வேய்ந்த கடிமனைகளிலே கலை வல்லார்கள் வாழ்ந்து வந்தனர். ஆ காத்து ஓம்பும் வாழ்க்கையினையுடைய ஆயர்குல மக்களும் அந் நகரில் வாழ்ந்து வந்தனர். இடைக்குல மக்கள் உறைந்த பகுதியில் செம்மண் பூசப்பெற்ற சிறிய இல்லங்கள் இருந்தன. அவை கட்டு வேலியினை யும், குளிர்ந்த காவணங்களையும் உடையன. அம் மக்கள் கீழே அமர்ந்து உண்பதற்குப் பனையோலை

---

* இஃது இக்காலத்தும் காமன் பண்டிகை என்னும் பெயரால் கொண்டாடப்பெற்று வருகின்றது.

யால் ஆகிய தடுக்குகளைப் பயன்படுத்தினர். அவர்கள் உணவு உட்கொள்வதற்காக அமரும் இடத்தில் முதலில் தண்ணீர்தெளிப்பது வழக்கம்.

மதுரை மூதூரில் நான்கு திசைகட்கும் நான்கு வாயில்கள் இருந்தன. அம்மூதூர் சிறந்த குடி மக்களையும், பண்பு மேம்பாட்டினையும் உடையது; மிக்க வளப்பத்தையும், உணவின் பெருக்கத்தையும் உடையது. அதனால், அந்நகர மக்கள் 'மல்லன் மதுரையார்' என்று வழங்கப் பெற்றனர். அந்நகரில் வருவிருந்து ஓம்பி வாழும் பெருமனைக் கிழத்தியரும், பத்தினிப் பெண்டிரும் மகிழ்வோடு வாழ்ந்திருந் தனர். அந்திவிழவும், ஆரண ஓதையும் செந்தீ வேட்டலும், தெய்வம் பராவலும் அங்கு நிகழும். அரசன் அறிவிக்கும் செய்திகளை வள்ளுவன் யானை மீதிருந்து முரசறைந்து பொது மக்களுக்கு அறிவிப்பது உண்டு. மதுரை மாநகரினைக் குறித்து இத்தகைய பல செய்திகள் சிலப்பதிகாரத்தால் அறியக் கிடக்கின்றன.

## திருவிளையாடற் புராணத்திலே மதுரை மாநகரம்

**மதுரைப் பேரூர்:**

திருவிளையாடற் புராணத்திலும் மதுரை மா நகரின் சிறப்பு அழகுபட வகுத்துக் கூறப் பெறுகின் றது. இந்நூலில், அகநகர், புறநகர், அகழி, மதில் திருக்கோவில் ஆகியவற்றின் சிறப்புக்கள் நன்கு புனைந்துரைக்கப் பட்டுள்ளன. பாண்டிய நாடு, நிலமகளின் மார்பில் கிடந்து ஒளிவீசும் பதக்கம் என்றும், அதன் புறத்துள்ள நகரங்கள் அனைத்தும், அப்பதக்கத்தைச் சுற்றிப் பதிக்கப்பெற்ற மணிகள்

என்றும், மதுரைத் திருநகரானது, அப்பதக்கத்தில் நடுநாயகமாக விளங்கும் மணியாகும் என்றும் பாராட்டப்பெற்றுள்ளது.

**புறநகர் :**

மருத நிலங்களில் நெற்பயிர் கரும்புகளைப் போல உயர்ந்து விளங்கும்; கரும்புகளெல்லாம் கமுக மரங்களைப் போன்று சிறந்து தோன்றும்; கமுக மரங்கள், தென்னை மரங்களைப் போன்று உயர்ந்து விளங்கும்; தென்னை மரங்கள், மேகமாகிய பந்தலைத் தாங்கும் உயர்ந்த கால்களைப் போலத் தோன்றும்; குளிர்ந்த மலர்ச் சோலைகள், மலர்களை யும், கனிகளையும் விரும்பியவர்க்கு அளிக்கும். நெற் பயிரோடு பாக்கு மரத்தை வெற்றிலைக் கொடிகள் சுற்றி நிற்கும் தோற்றம், சிவபெருமானின் திரு விழாவில் தருப்பைப் புல்லோடு கட்டப்பெற்ற கொடிமரத்தை ஒத்திருக்கும்.

செருந்தி மரங்கள் தாமரை மலர்களின்மேல் தேனையும், மலர்களையும் சொரியும். இது மறையோ தும் அந்தணர்க்குப் பொன்னைநீர்வார்த்துக்கொடுப் பதனை ஒத்து விளங்கும். தாமரை மலராகிய இருக் கையில், அரசவன்னம் தன் பெடையோடு வீற்றி ருக்கும், தடாகமாகிய பெண், தாமரை இலையாகிய மரகதத் தட்டில்,வெண்முத்தாகிய நீரைக்கொண்டு ஆரத்தி எடுப்பது போலத் தாமரைத் தடாகம் விளங்கும். கரும்பாலையில் உள்ள பொறிகள், பணி யாட்கள் கொடுக்கும் கரும்புகளை இடியொலி போன்று நெரித்து, வண்டுகள் மொய்க்கும்படி சாற் றைப் பொழியும். இத்தோற்றம்,பாகர் கொடுக்கும்

கரும்புகளை ஒலியோடு முறித்துத் தின்று, வண்டு கள் மெய்க்கும்படி சாற்றினைச் சிந்தும் யானைகளை ஒத்து விளங்கும்.

**அகழி :**

பெருங்கடல் மதுரை மாநகரின் புறத்தே வந்து தங்கியது போல, மதிலைச் சூழ்ந்து அகழியானது விளங்கிற்று. அவ்வகழியில் அடிக்கடி வாளை மீன்கள் எழுந்து துள்ளும்; ஆமைகள் தம் உறுப்புக் களை விரித்துக் கொண்டு திரியும். இவை, அகழி யானது வாள்களையும், கேடயங்களையும் கொண்டு பகைவருடன் போரிடுவதை ஒக்கும். அவ்வகழி யில் கொடிய கூற்றுவனைப்போன்று முதலை கிடந்து வருத்தும். அவ்வகழியே அன்றி, வைகை நதியும் மதிலின் ஒரு புறத்தேயுள்ள ஓர் அகழியைப் போன்றே விளங்கும். அன்னப் பறவைகளும், தாமரை மலர்களும் நிறைந்த நீர்நிலைகள், காண்ப வர்களின் கண்களையும் மனத்தையும் கவரும் இயல்பினை உடையனவாகும்.

**மதிலின் சிறப்பு :**

மதுரை மாநகருக்குக் காவலாய் அமைந்த மதில்,சோமசுந்தரக் கடவுள் கையில் அணிந்துள்ள பாம்பாகும். மதிலை மறைத்து நின்று மேகம் தவழ்ந்து செல்லுதல், பாம்பு நெளிந்து செல்வதை ஒக்கும். அம்மதில், கதிரவனின் தேர் செல்லும் வானுலக வழியினைத் தடுக்கும். மதிலின் புறத்தே பகைவர்கள் சூழ்ந்து முற்றுகையிட்ட காலத்து, அவர்களை எதிர்த்துப் போர் புரிவதற்கு வீரர்கள் வேண்டியதில்லை; அம்மதிலில் அமைந்துள்ள

பொறிகளே அவ்வீரர்களை எதிர்த்துப் போர் செய்ய வல்லன. அப்பொறிகளுள் சில மழுப்படைகளை வீசி எறியும்; நஞ்சு தோய்ந்த வாட்படைகளையும், முத்தலைச் சூலங்களையும் எறியும்; வேல்களையும், சக்கரங்களையும் அனல் உமிழ எறியும்; வளைதடிகளையும், நெருஞ்சில் முள் வடிவுடைய படைகளையும் நெடிய கொழுப் படைகளையும் எறியும்; கவண் கயிற்றில் கல்லைக் கோத்து வீசி எறியும்; பாம்புப் பொறிகள் நாக்கை நீட்டிப் பகைவரைக் கொல்லும்; மலைப்பாம்புப் பொறிகள் போர்புரிபவரை வாயைத் திறந்து விழுங்கும். யானைப் பொறிகள் இருப்புலக் கைகளால் எதிரிகளின் தலைகள் சிதறும்படி வீசி அடிக்கும். புலிப் பொறிகள் விரைந்து பகைவர்களை அமுக்கும். குதிரைப் பொறிகள் பகைவர்களின் மார்பு எலும்புகள் முறியும்படி உதைத்து, அவர்களை அகழியின்கண் தள்ளும்.

சில பொறிகள் உருள்கல், இருப்புமுளை, அரி கயிறு ஆகிய படைகளை எறிந்து பகைவரை அழிக்கும். கொள்ளிவாய்ப் பேய்ப் பொறிகள், நெருப்பை உமிழ்ந்து நக்கும்; சில பேய்ப்பொறிகள், குதித்து விளையாடும்; கை கொட்டும்; தோள் தட்டும். சில பொறிகள், சங்கிலிகளைப் பகைவரின் மீது வீசி இழுக்கும்; கைகளை அறுக்கும் பொருட்டு அரிசங்கிலியை விட்டு இழுக்கும்; தலைகளைத் திருகும்; நெருப்பைச் சிந்தும்; கற்களை உருட்டி விட்டுக் கொல்லும்; கல் மழையைப் பொழியும்; வறுத்த மணலைக் கொட்டும்; உருகிய உருக்கு நீரையும்; செம்பு நீரையும் வீசித் தெளிக்கும்; பகைவர் விடுக்கின்ற படைகள் அனைத்தையும் எதிர்

நின்று பிடித்து, அவர்கள் மேலே செருக்குடன் வீசும்; பல இடங்களிலும் சென்று, உடுக்கை ஒலியைப் பேரிகையின் ஒலியோடு மிகச்செய்து திரும்பும்; நடைத்தேரை நடாத்திச்சென்று, அம்பு மழையைப்பொழிந்து,போர்புரியும். அப்பொறிகள் காலனையே வென்றாலும் தம்மை வெல்ல முடியாதனவாக விளங்கும். இத்தகைய அருமை வாய்ந்த பொறிகள் அனைத்தும் யவனர்களால் செய்யப் பெற்றவையாகும்.

**அகநகர் :**

மதுரைமாநகர வீதிகள் திருவிழாக்கள் நீங்கப் பெறாதனவாய் இருந்தன. அவை கரும்புகளையும், பூமாலைகளையும் இரத்தினாபரணங்களையும், தூபங்களையும், தீபங்களையும் பூரணகும்பங்களையும் உடையனவாக விளங்கின. அவை இங்ஙனம் விளங்குவதனால், தலைவரின் வருகையை எதிர் நோக்கி நிற்கும் கற்புடைய மகளிரை ஒத்திருந்தன. அவ்வீதிகளில் சந்திரகாந்தக் கற்களாலும், பளிங்குக் கற்களாலும் ஆகிய மாளிகைகள் விளங்கின. யானைகளும் பெண்களும் செல்லும் வீதிகளில் கத்தூரியின் மணங் கமழ்ந்தது.

மகளிரின் மதிபோன்ற முகங்கள் குழைகளை உடையன; தடாகங்கள் தளிர்களும் அன்னப் பறவைகளும் பொருந்தியனவாக இருந்தன; மலர்ச் சோலைகள் வண்டுகளை உடையன; நீர்த்துறைகளிலே யானைகள் குடைந்து ஆடின; இல்லங்களில் சோறுகள் நிரம்பி இருந்தன. வான்போல் உயர்ந்த மாளிகைகளில் திருமண விழாக்கள் நிகழ்ந்த வண்ணம் இருந்தன.

மதுரை மாநகரின் வீ தி க ளி ன் பெருமை அளவிட்டுக் கூறுவதற்கு அரியதாகும். மகளிர் வெறுப்புக்கொண்டு எ றி ந் த அணிகளும், அம்மனையும், பந்தும், விளையாடும் பெண்டிர் சுமக்க இயலாது இட்ட ஆபரணங்களும், தம் சிற்றில்களை அழித்த இளைஞர்களோடு வெகுண்ட பெண்கள் அறுத்தெறிந்த முத்துமாலைகளும் அவ்வீதிகளிலே குவிந்து காணப்பட்டன. சோமசுந்தரக் கடவுளின் திருவிழாவைக் கா ண் ப த ற் கு வந்தாற்போல வெள்ளிய மாட வரிசைகள் காட்சி வழங்கின. மதுரைத் திருவீதிகளில் தேரின் ஒலியும், குதிரைகளின் கனைப்பொலியும், யானைகளின் பிளிற்ருெலியும், தோற் கருவி, துளைக் கருவி, நரப்புக் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்னும் ஐவகை இசைக் கருவிகளின் ஒலியும் நிறைந்திருந்தன.

மதுரை மாநகரில் வேளாளர், வணிகர், மன்னவர் வீதிகள், மறையவர் வீதி, சைவர் வீதி முதலிய பலவகை வீதிகள் அமைந்திருந்தன. வேளாளர் வீதியில், விருந்தினர்க்கு அறுசுவை உணவுகளை அளித்து முகமன் கூறும் ஒலியும், தமிழ்ப்பாக்களின் சொற்சுவை பொருட்சுவைகளைப் பாராட்டும் ஒலியும், புலவர்க்குப் பெரும் பொருளைக் கொடுப்பதனுல் உண்டாகும் ஒலியும் நிறைந்திருந்தன. வேளாளப் பெருமக்கள், விருந்தினர் வந்து விருந்துண்டு செல்ல, மேலும் வரும் விருந்தினர்களின் வருகையை எதிர்நோக்கி நின்றனர். இவர்களுடைய செயல், வித்தினை விதைத்துவிட்டு, மழை எப்போது வரும் என்று வானை எதிர் நோக்கிக் கொண்டிருக்கும் உழவர்களின் செயலை ஒக்கும்.

வணிகர்கள் இருக்கும் கடை வீதிகளிலுள்ள திண்ணைகள், நீல மணிகளால் விளங்கும்; சுவர்கள் பளிங்கின் ஒளியை வீசும் வயிரத் தூண்களால் விளங்கும்; அவற்றிடையே முத்துச் சரங்கள் வரிசையாகத் தொங்கும். வணிகருடைய வீடுகளில் உள்ள கதவுகள் செம்பொன்னுலும், தாழ்ப்பாள் கள் வயிரத்தாலும் ஆகியவை. வணிகச் சிறுமியர் வைத்து விளையாடும் அம்மியும், குழவிகளும் மரக தத்தால் ஆகியவை; உரல்களும் உலக்கைகளும் வயிரத்தால் ஆகியவை; அடுப்புக்கள் வெள்ளியால் செய்யப்பெற்றவை; சமைக்கும் பாத்திரங்கள் பொன்னுல் ஆனவை. சிறுமியர் சமைத்து விளையாடு வதற்கு முத்துக்கள் அரிசியாகும்; மாணிக்கங்கள் நெருப்பாகும். வணிகர் வீதிகளில் மாணிக்கங் களும், பொற்கட்டிகளும், மரகதங்களும், முத்துக் களும், வயிரங்களும், பவளங்களும் சிதறிக் கிடக் கும். ஆபரணங்களை விற்கும் வணிகர் கடை வீதிகள், இரவும் பகலுமற்ற விண்ணுலகம் போல விளங்கும். விலையுயர்ந்த பட்டாடைகளும், பருத்தி ஆடைகளும், வேறு பல அரிய பொருட்களும் வணிகர் கடை வீதிகளில் நிறைந்திருக்கும். அவ் வீதிகளில் பல்வேறு மொழிகளின் ஒலிகளும் நிறைந் திருக்கும்.

மன்னவர் வீதிகளில் குதிரைக் கூடங்களும், யானைக் கூடங்களும் மிகுதியாக இருந்தன. பல்வகைப் படைக்கலத் தொகுதியோடு கொற் றவை வாழ்கின்ற கூடங்களும் இருந்தன. அரசிளங் குமரர்கள் போர்ப் பயிற்சி பெறும் கூடங்களும் அளவற்றனவாக விளங்கின. அவ்வீதிகளிலே

நீல மணியாலாகிய மாளிகைகளும் செம்மணியால் கட்டப்பெற்ற மாளிகைகளும், சந்திரகாந்தக் கற்களால் அமைக்கப்பெற்ற மாளிகைகளும்' வரிசை வரிசையாக அமைந்திருந்தன. பாண்டிய மன்னரின் எழுநிலை மாடங்களை உடைய மாளிகை, மதுரை மாநகரில் வட கிழக்குப் பக்கத்தில் அமைந்திருந்தது.

மறையவர் வீதிகளில் உள்ள அந்தணர்களுடைய வீடுகள் அனைத்தும், மறைபயிலும் சிறுவர்கள் மறையோதும் சாலைகளாக விளங்கின. அவர்கள் இல்லங்களில் பொருந்திய கிளிகளும் அம்மறையினைக் கூறின. அவ்வீதிகளில் தவமுனிவர்கள் வாழும் மடங்கள் அமைந்திருந்தன. அவ்வீதிகளில் சமையல் அடுப்புகளினின்று எழுந்த புகையும், மேல்மாடத்தில் அகிற்கட்டையினின்று எழுந்த புகையும், வேள்விக் குண்டத்தினின்று எழுந்த புகையும், ஒன்று கலந்து கதிரவனை மறைக்கும்.

சைவப் பெரியவர்கள் வாழ்ந்த வீதிகளில் மடங்கள் பல திகழ்ந்தன. அங்கே சிவபெருமானை வணங்குவோரும், சிவனடியார்களை வணங்கிப் பிறப்பினைப் போக்குவோரும், சிவாகமங்களைக் கேட்போரும், சிவபெருமான் திருவுருவைச் சிந்திப்போருமாகப் பலர் உள்ளனர். அங்கே சைவ ஞானசிரியர் பலர் உள்ளனர்; பல சிவயோகியர் கூட்டங்களும் உள்ளன.

**திருக்கோவிலின் சிறப்பு:**

சொக்கலிங்கப் பெருமான் எழுந்தருளிய திருக்கோவில், வேய்ங்குழலின் ஒலியும், தும்புரு, நாரதர்

களின் இசைப்பாட்டின் ஒலியும் நீங்கப் பெருததா கும்; தேவாரத் திருமுறைகள் ஓதும் ஒலியும், நான் மறைகளின் ஒலியும், முழவின் ஒலியும் நீங்கப் பெருதிருக்கும்; பெண்களின் ஆடல் ஒலியும், திரு விழாவின் ஒலியும் நீங்காதிருக்கும். அத்திருக் கோவிலில் இறைவன் திருநடம் புரியும் வெள்ளியம் பலத்தினின்று எழும் வெள்ளிய ஒளியின் நீட்சி, கயிலை மலையின் உயர்ச்சியைப் போல விளங்கும். கடப்ப மரம் சோமசுந்தரக் கடவுளின் அருகில் தேன் துளித்து, மலர்களைத் தூவிக்கொண்டு நிற் கும். 'கடல் இது' என்று சொல்லும்படி அமைந்த அகழியும், 'சக்கரவாளகிரி இது' என்று கூறும்படி அமைந்த மதிலும், 'எட்டாய் விளங்கும் மலைகள் இவைதாம்' என்று மொழியும்படி அமைந்த கோபு ரங்களும், 'இது மேருமலை' என்று மொழியும்படி அமைந்த இந்திர விமானமும் திருக்கோவிலுக்கு அணி செய்தன.

**மதுரை மாநகரச் சிறப்பு:**

மதுரை மாநகரில் எல்லா வளங்களும் தழைத் துள்ளன. இம்மாநகரில் வாழும் மக்கள் எல்லாப் பொருள்களும் நிரம்பப் பெற்று இன்பமுற்றனர். இம்மாநகர் சிவலோகம் என்று புகழ்வதற்கு அமைந்த பெருமை பொருந்தி இருந்தது. மதுரை மாநகரில் தேவருலகின்கண் உள்ள செல்வங் களினும் சிறந்த பல செல்வங்கள் விளங்குவதைக் கண்டு, தேவர்கள் பொருமையால் கண் இமையாத வராய் இருக்கின்றனர். பாண்டிய மன்னர் வேற் படையை எறிந்து கடலை வற்றச் செய்ததும், தேவேந்திரன் செருக்கை அடக்கியதும், மேகங்

களைச் சிறையிட்டதும், மேருமலையைச் செண்டால் அடித்ததும் மதுரை மாநகரின் வலிமையினலேயே ஆகும். மதுரை மாநகரின் செல்வ வளத்தை, ஆயிரம் நாப் படைத்த ஆதிசேடனுலும் கூற இயலாது; ஆயிரம் கண் படைத்த இந்திரனுலும் காண இயலாது. இம்மதுரை மாநகருக்குச் சிவ நகரம், கடம்பவனம், சீவன் முத்திபுரம், கன்னி புரம், திருவாலவாய், பூலோக சிவலோகம், சமட்டி விச்சாபுரம்,* நான்மாடக்கூடல், துவாத சாந்தத்தலம் எனப் பல பெயர்கள் வழங்கி வந்தன.

திருவிளையாடற் புராணத்துள் வையையின் சிறப்பும், பொற்ருமரைக் குளத்தின் பெருமையும், சோமசுந்தரக் கடவுளின் பெருமையும் மிகவும் உயர்வாகக் கூறப்பட்டுள்ளன. பொற்ருமரைக் குளத்திற்கும், சோமசுந்தரப் பெருமானுக்கும் வழங்கி வந்த பல்வேறு பெயர்களும் கூறப் பெற்றுள்ளன.

---

* இது சிவஞானம் முதலிய எல்லா ஞானங்களையும் தருதலால் பெற்ற பெயர் என்பர். மதுரை மாநகரில் இன்றும் சமட்டிபுரம் என்று ஓரிடம் காணப்பெறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

# 6. இடைக்கால மதுரை

**இடைக்கால மதுரை :**

மதுரை மாநகரம் இடைக் காலத்திலும் சிறந்த நிலையிலேயே இருந்து வந்தது. கி. பி. பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கம்வரை இம்மாநகரம் மிகவும் உயர்ந்த நிலையில் இருந்தது. இதனை இலக்கியங்களைக் கொண்டும், கல்வெட்டுக்களின் துணை கொண்டும் நன்கு அறியலாம். திருவிளையாடற் புராணம் கி. பி. பதினாறும் நூற்றாண்டில் எழுந்த நூலாக இருப்பினும், இடைக்கால மதுரையின் சிறந்த அமைப்பினை அதனைக் கொண்டு நன்கு உணர முடிகின்றது.

**நகரின் அமைப்பு :**

இக்காலத்தில் மதுரை மாநகரைச் சூழ்ந்து வளைந்த பெரிய மதில் இருந்தது. அம்மதிலுக்குள் ஏழு திருச்சுற்றுக்கள் இருந்தன. அத்திருச்சுற்றுக் களில் பாண்டிய மன்னனுடைய அரண்மனையும், குடிமக்கள் வாழும் தெருக்களும், கோவில்களும் அமைந்திருந்தன. மீனாட்சியம்மன் கோவில் நடுநாயகமாகத் திகழ்ந்தது. பாண்டிய மன்னனுடைய அரண்மனை, நகரின் வடகிழக்குப் பகுதியில் அமைந்திருந்ததாகத் திருவிளையாடற் புராணம் தெரிவிக்கும் செய்தி, முன்னரே கூறப் பெற்றது.

**நகரின் உயரிய நிலை :**

இடைக்காலத்தில் மதுரை மாநகரம் உயரிய நிலையில் இருந்த இயல்பினை, அதனைக் கோநகராகக்

கொண்டு ஆட்சி புரிந்து வந்த பாண்டிய மன்னர்களின் வரலாற்ருல் நன்கு உணரப்படும். கி. பி. 7ஆம் நூற்ருண்டில் ஞானசம்பந்தர் மதுரைக்கு வந்துள்ளமையும், கி. பி. 9ஆம் நூற்ருண்டில் மணிவாசகப் பெருமான் பாண்டிய மன்னனுக்கு அமைச்சராக இருந்தமையும் அறியப்படுகின்றது.

**நாயக்க மன்னர்கள் :**

கி. பி. பதினுன்காம் நூற்ருண்டின் தொடக்கத்தில் மாலிக்காபூரின் படையெடுப்பால் மதுரை மாநகரில் பெரும் பகுதியும் அழிக்கப்பட்டது. பின்னர், விசய நகர வேந்தர்களின் ஆட்சிக் காலத்தில், மதுரையம்பதியில் பல பகுதிகள் புதுப்பிக்கப்பட்டன. விசுவநாத நாயக்கர் காலத்திலிருந்து மீனுட்சியம்மன் கோவில் விரிவடைந்தது. அவருக்கு அமைச்சராக இருந்த தளவாய் அரியநாத முதலியார், ஆயிரக்கால் மண்டபத்தைக் கட்டுவித்தார். பின்பு திருமலே நாயக்க மன்னர் காலத்தில் கோவிலில் பல திருப்பணிகள் செய்யப்பெற்றன; மகால், புது மண்டபம், வண்டியூர்த் தெப்பக்குளம் ஆகியனவும் அமைக்கப்பட்டன. இங்ஙனம் நாயக்க மன்னர்கள் மதுரை மாநகரின் பழங்காலப் பெருமையினே மீண்டும் கொண்டு வந்த பெருமைக்கு உரியவராயினர். மதுரை மாநகரும் நாயக்க மன்னர்களின் ஆட்சிச் சிறப்பால் பல நன்மைகளேப் பெற்றுச் சிறந்து விளங்கலாயிற்று

---

# 7. *இன்றைய மதுரை மாநகரம்

## நகரின் அமைப்பு

**கோவில் மாநகர் :**

மதுரை மாநகரம் இன்றும் எழில் கொழிக்கும் திருநகராய் விளங்குகின்றது. இது கடல் மட்டத்திற்கு மேல் 100 மீட்டர் உயரத்தில் இருக்கின்றது; ஏறத்தாழப் பதினறு கி.மீட்டர் சுற்றளவும், நான்கு நூறுயிரம் மக்கள் தொகையும் கொண்டது. இந்நகரின் வனப்பு மிக்க அமைப்புக் காண்போர் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரவல்லதாகும். நடுவண் கோவிலும், அதனைச் சூழ்ந்து நகரும் அமைந்துள்ள காட்சி, கண்கொள்ளாக் காட்சியாகும். நகரின் நடுவிலே மீனுட்சியம்மன் திருக்கோவில் பேரழகோடு திகழ்கின்றது. இத்திருக்கோவில் இந்நகருக்குச் சிறப்பையும், கவின்பெறு தோற்றத்தையும் வழங்குகின்றது. ஆதலின், இந்நகருக்குக் கோவில் மாநகர் என்னும் சிறப்புப் பெயரும் அமையலாயிற்று.

---

* இன்றைய மதுரைக்குத் தென்மேற்கில் திருப்பரங்குன்றம் அமைந்திருக்கின்றது. நக்கீரர் மதுரைக்கு மேற்கே திருப்பரங்குன்றம் உள்ளது என்று கூறுவதனுல், இன்றுள்ள மதுரை முற்கால மதுரை அன்று என்று கருதப்படுகின்றது. புலவர்கள் தென்மேற்கை, மேற்கு என்று பெருந்திசை மட்டும் சுட்டிக் குறிப்பதும் உண்டு என்று தெரிகின்றது. பட்டினப்பாலையில் பொதிகைமலை குடமலை என்று குறிக்கப்படுகின்றது. இதற்கு விளக்கம் கூறிய உரையாசிரியர் 'புகார் நகருக்குத் தென்மேற்கே இருத்தலின், அதனைக் குடமலை என்றுர்' என்று உரைக்கின்றுர். ஆதலின், இக்கால மதுரையே முற்கால மதுரையாக விளங்கி இருக்கக்கூடுமோ என்பது மேலும் ஆராய்தற்குரியது.

**வீதிகளின் அமைப்பு :**

இத்திருக்கோவிலைச் சூழ்ந்து மாபெருந் தெருக்கள் அழகாக அமைந்திருக்கின்றன. இத் தெருக்கள் ஒழுங்காகவும், முறையாகவும் அமைந் துள்ள சிறப்பு, வியப்பையே அளிக்கின்றது. கோவி லின் வெளிச்சுற்றுமதிலை ஒட்டிக் கோவிலுக்குள் நான்கு திசைகளிலும் நான்கு வீதிகள் அமைந் துள்ளன. இவை **ஆடிவீதிகள்** எனப்படும். இங்ஙனமே அச்சுற்று மதிலை ஒட்டிக் கோவிலின் வெளிப்புறத்திலும் நான்கு தெருக்கள் அமைந்திருக் கின்றன. இவை **சித்திரை வீதிகள்** எனப்படும். இவ்வீதிகளைச் சூழ்ந்து அமைந்திருப்பவை **ஆவணி மூல வீதிகள்** என்று பெயர் பெறும். இவற்றின் பின்னர் அமைந்திருப்பவை **மாசி வீதிகள்** எனப் படும். இம்மாசி வீதிகளைச் சூழ்ந்து காணப்படுபவை **வெளிவீதிகள்** என்று வழங்கப்பெறும்.

நகர் நடுவண் கோவிலும், அதனைச் சூழ்ந்து தெருக்களும் இங்ஙனம் ஒழுங்காக அமைந்திருக்கும் ஒரு நல்ல அமைப்பைப் பிற இடங்களில் காண்பது அரிது. இத்தகைய ஓர் உயரிய அமைப்பு முறை, பரிபாடல் காலத்திலேயே அமைந்திருந்ததாகக் கருத இயலுகின்றது. மதுரை மாநகரின் அமைப் பினைக் குறித்துப் பரிபாடல் கூறும் செய்தியினை ஈண்டு நினைவிற் கொள்க.

சித்திரை வீதிகளும், ஆவணிமூல வீதிகளும் சிறந்த கடைத்தெருக்களாகக் காணப்படுகின்றன; மாசி வீதிகள், வெளி வீதிகள் ஆகியவைகளும் கடைத் தெருக்களாகவே காணப்படுகின்றன; கிழக்

குச் சித்திரை வீதியும், தெற்குச் சித்திரை வீதியும் பெரும்பாலும் அறுவைக் கடைத் தெருக்களாக (துணிக்கடைகள்) விளங்குகின்றன; தெற்குஆவணி மூல வீதி ஆபரணக் கடைத்தெருவாக இலங்குகின்றது. மேலே கூறிய பெருந் தெருக்களையும், பிற சிறிய தெருக்களையும், நெடுந்தெருக்களையும், குறுந் தெருக்களையும் எண்ணும்போது, சங்ககால நூல்களுள் கூறிய தெருக்களின் இயல்புகள் நம் அகக்கண் முன்னே தோன்றுகின்றன. அவைகளில் கூறியுள்ள தெருக்களுக்கும் இன்றுள்ள தெருக்களுக்கும் உள்ள ஒப்புமைகளைக் காணுந்தோறும், பேரின்பமும் பெருவியப்பும் மேலிடுகின்றன. அப்பஞ் சுடுவோர் தெருக்களின் ஓரங்களில் இருந்து அப்பம் முதலியன சுட்டு விற்ற செய்தி, மதுரைக் காஞ்சியில் காணப்படுகின்றது. இந்த இயல்பை மதுரைத் தெருக்களில் இன்றும் காண முடிகின்றது. மாசிவீதி போன்றவைகளின் நடைபாதைகளில் விடியற்காலையில் அப்பம், இட்லி போன்றவை சுட்டும், அவித்தும் விற்கப்படுவதும், 8 மணி ஆவதற்குள் அவை நீக்கப்பட்டு விடுவதும், இன்றும் கண்கூடாகக் காண இயலுகின்றது.

**புதிய அமைப்புக்கள்:**

மதுரை மாநகரம் இப்பொழுது நாளுக்குநாள் விரிவடைந்துகொண்டே வருகின்றது. நகரமைப்புக்கலைத் திட்டப்படி நகரானது செவ்விய முறையில் அமைக்கப்பட்டு வருகின்றது. தல்லாகுளம், சொக்கிகுளம், காந்திநகர், ஞானஒளிவுபுரம் போன்ற இடவமைப்புக்கள் புதியனவாகத் தோன்றியுள்ளன. சொக்கிகுளம் போன்ற பகுதி

களில் செழுங்குடிச் செல்வர்களின் வளமனைகள் அமைந்துள்ளன. நகரில் அமைந்துள்ள கோவில் களும், கல்லூரிகளும், உயர்நிலைப் பள்ளிகளும், மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும், தொழில கங்களும், பிற கட்டடங்களும் நகருக்கு அழகினைத் தருகின்றன.

**நகரின் சுற்றுப்புறம் :**

சங்க காலத்தைப் போன்றே, இன்றும் மதுரை மாநகரினைச் சூழ்ந்து அழகிய இயற்கைக் காட்சிகள் அமைந்திருக்கின்றன. வையையாறு இன்று நகரின் வழியாகவே செல்லுகின்றது. இம் மாநக ரினைச் சூழ்ந்து நான்கு பக்கங்களிலும் செந்நெற் பழனங்கள் அமைந்திருக்கின்றன; மேலைத் திசை யில் தென்னஞ் சோலைகளும், வாழைத் தோட்டங் களும், மாமரங்களும் பொலிந்து தோன்றுகின்றன; வடதிசையிலும் சிற்சில இடங்களில் இங்ஙனமே காணப்படுகின்றன; கீழைத் திசையிலும் நல்ல தென்னந் தோப்புக்கள் பொருந்தி இருக்கின்றன.

இந்நகரினைச் சுற்றிப் **பசுமலை, நாகமலை, யானைமலை** என மூன்று மலைகள் காணப்படு கின்றன. இந்நகரினின்று 8 கி. மீட்டர் தொலைவில் திருப்பரங்குன்றம் அமைந்திருக்கின்றது. தண்பரங் குன்றம் செல்லும் இடைவழியில் பெரிய செந்நெற் கழனிகள் அமைந்துள்ள பொலிவு, **திரு முருகாற்றுப் படையில் நக்கீரர்** பாடிய பழங்காலத் தோற்றப் பொலிவாக இன்றும் விளங்குகின்றது. மதுரை மாநகரினின்று வடபால் 19 கி. மீட்டர் தொலைவில் நெடுமாலின் நீலமேனி போன்ற **அழகர்மலையும்** அமைந்திருக்கின்றது.

# கோவில்கள்

## மீனுட்சியம்மன் திருக்கோவில்

**அழகிய காட்சி :**

அங்கயற்கண்ணி அம்மையின் திருக்கோவில் கண்ணைக் கவரும் இனிய காட்சியினை வழங்கு கின்றது. வான்போல் உயர்ந்து விளங்கும் வண்ணக் கோபுரங்களும், ஏனைய சிறிய கோபுரங்களும் இக்கோவிலுக்கு அழகிய தோற்றத்தை வழங்கு கின்றன. கோவிலைச் சூழவுள்ள மதிற்சுவரும், திருச்சுற்றுக்களும் செவ்விய முறையில் அமைக்கப் பெற்றுள்ளன. சொக்கநாதர் திருமுன்பும்(சந்நிதி), அம்மையின் திருமுன்பும் எழில் மிக்க தோற்றப் பொலிவோடு விளங்குகின்றன. கோவிலில் அமைந்துள்ள தங்கக்கொடிமரமும், பொற்ருமரைக் குளமும், மண்டபங்களும், சிற்பச் சிலைகளும் இக்கோவிலுக்குப் பேரழகை ஊட்டுவனவாக உள்ளன.

## அம்மை திருமுன்பு

**அம்மை திருமுன்பு வாயில் வழி :**

மீனுட்சியம்மன் திருக்கோவிலில் அம்மையின் திருமுன்பே சிறப்புப் பெற்று விளங்குகின்றது. மக்கள் பெரும்பாலும் அம்மை திருமுன்பு வாயில் வழியாகவே கோவிலுக்குள் செல்கின்றனர். இவ்வாயிலில் ஏனைய வாயில்களில் உள்ளன போன்று பெரிய கோபுரம் அமைக்கப்படவில்லை.

**அட்டசக்தி மண்டபம் :**

இவ்வாயிலின் வழியாகக் கோவிலுக்குள் நுழைந்ததும், கண்ணைக் கவரும் சிற்பங்களும், ஓவியங்களும் நிறைந்த ஒரு மண்டபம் தோன்றும். அஃது அட்டசக்தி மண்டபம் என்று பெயர் பெறும். அதற்கு அட்டலட்சுமி மண்டபம் என்னும் பெயரும் உண்டு. கௌமாரி, இரௌத்திரி, வைணவி, மகாலட்சுமி, எக்ஞரூபணி, சாமளை, மகேசுவரி, மனோன்மணி என்னும் எண்மரின் உருவச் சிலைகள் அம்மண்டபத்தின் இருபுறங்களிலும் உள்ள தூண்களில் இடம் பெற்றுள்ளன. ஆதலின், அதற்கு அட்டசக்தி மண்டபம் என்னும் பெயர் உண்டாயிற்று.

**மீனாட்சி நாயக்கர் மண்டபம் :**

அட்டசக்தி மண்டபத்தை அடுத்து ஒரு பெரிய மண்டபம் உள்ளது. அது **மீனாட்சி நாயக்கர் மண்டபம்** எனப்படும். நாயக்கர் கால் மண்டபங்களில் காணப்படுவன போன்ற பெரிய சிலைகளும், அதனைக் கட்டியவரின் உருவச் சிலையும் அம்மண்டபத்தில் காணப்படவில்லை.

அட்டசக்தி மண்டபத்தையும், மீனாட்சி நாயக்கர் மண்டபத்தையும் இணைக்கும் ஒரு மண்டபம் உள்ளது. இங்கு 1008 விளக்குகள் கொண்ட அழகிய பித்தளைத் திருவாட்சி ஒன்று அமைக்கப்பெற்றுள்ளது. இத்திருவாட்சி சிவகங்கைச் சீமையை ஆட்சி புரிந்து வந்த மருது பாண்டியரால் அமைக்கப் பெற்றது.

**ஊஞ்சல் மண்டபம் :**

மீனுட்சி நாயக்கர் மண்டபத்தினின்று கோவிலுக்குள் நுழையும் வாயிலில் சித்திரக் கோபுரம் அமைந்திருக்கின்றது. அதனை அடுத்து காணப் படுவது முதலிப்பிள்ளை மண்டபமாகும். இம்மண்ட பத்தைக் கடந்துசென்ருல், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பொற்ருமரைக் குளம் தோன்றும். அதனைத் தாண்டிச் செல்லின், ஊஞ்சல் மண்டபம் தென்படும். இம்மண்டபத்தில் கருஞ்சலவைக்கல் தூண்களையுடைய ஊஞ்சல் மேடை ஒன்று அமைந் திருக்கின்றது. அதனுல், இஃது ஊஞ்சல் மண்டபம் என்னும் பெயரை ஏற்பதாயிற்று.

**கிளிக்கூட்டு மண்டபம் :**

ஊஞ்சல் மண்டபத்தை அடுத்துக் காணப்படும் கவின்பெறு மண்டபம், கிளிக்கூட்டு மண்டபம் எனப்படும். இங்கு ஒரு பெரிய கூட்டில் கிளிகள் வளர்க்கப்படுகின்றன. இம்மண்டபத்திற்குச் சங்கிலி மண்டபம் என்ற பெயரும் உண்டு. இம்மண்டபத் தில் முன்பு கோலாட்டத்திருவிழா நடைபெற்றது. அக்காலத்தில் சிறுமியர் அழகிய கயிறுகளைத் தொங்கவிட்டு, அவைகளைப் பற்றிக்கொண்டு கோலாட்டம் ஆடினர். அவர்கள் அக்கயிறுகள் தாமே சங்கிலிபோலப் பின்னிக் கொள்ளும் வண் ணம் சுற்றிச் சுற்றி ஆடினர். அதன் காரணமா கவே சங்கிலி மண்டபம் என்ற பெயரும் இதற்கு ஏற்படலாயிற்று. இக்கோலாட்ட விளையாட்டு இப் பொழுது இங்கு நடைபெறுவது இல்லை.

**அம்மையின் திருக்கோவில் :**

கிளிக்கூட்டு மண்டபத்தினின்றும் ஒரு சிறிய கோபுரவாயிலைக் கடந்து உள்ளே சென்றால், அங்கயற்கண்ணி அம்மை திருக்கோவிலின் இரண்டாம் திருச்சுற்றினை அடையலாம். இத்திருச்சுற்றில் தங்கக் கவசம் பொறிக்கப்பெற்ற கொடி மரம் காட்சியளிக்கும். இத்திருச்சுற்றின் மேற்குக் கோடியில் கொலுமண்டபம் அமைந்திருக்கின்றது. ஆண்டுதோறும் புரட்டாசித் திங்களில் நிகழும் கலைமகள் விழாவின் (நவராத்திரி) போது இங்குக் கொலுக் காட்சி நடைபெறும்.

**ஆறுகால் மண்டபம் :**

முன் கூறப்பெற்ற கொடிமரத்தை உடைய கம்பத்தடியினின்று ஆறுகால் பீடத்தின் வழியாக முதல் திருச்சுற்றுக்குச் செல்லுதல் வேண்டும். இவ்வாறுகால் பீடம் வரலாற்றுப் புகழ்பெற்ற பெருமையுடையது. குமரகுருபர அடிகள் தாம் இயற்றிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழை இம்மண்டபத்தின்கண் அமர்ந்தே அரங்கேற்றஞ் செய்தனர்.

**மகாமண்டபமும் கருவறையும் :**

இம்மண்டபத்தைக் கடந்து சென்றால், மகாமண்டபம் காணப்படும். இம்மண்டபத்தின் மேற்குப் பகுதியில் மீனாட்சியம்மையின் அர்த்த மண்டபமும் கருவறையும் உள்ளன. இம்மண்டபத்தினின்று கருவறையில் நின்ற திருக்கோலத்தில் அருளொழுகும் கண்களோடு காட்சி நல்கும் அங்கயற்கண்ணி அம்மையின் அழகிய திருவுருவத்தைக் கண்குளிரக்

கண்டு மகிழலாம். முதல் திருச்சுற்றும் இம்மண்ட பத்திலேயே அமைந்திருக்கின்றது.

## சுவாமி திருமுன்பு

**வீரவசந்தராயர் மண்டபம்:**

கிழக்குக் கோபுரவாயில் வழியாகச் சுவாமி திருமுன்பிற்குச் சென்ருல், முதலில் காணப்படுவது வீரவசந்தராயர் மண்டபமாகும். இம்மண்டபத்தில் சுவாமி திருமுன்புக்கு நேராக நந்தி ஒன்று வைக்கப் பெற்றுள்ளது. இங்கும் உயரமான திருவாட்சி ஒன்று தென்படும். இத்திருவாட்சியும் மருதரசரால் அமைக்கப் பெற்றதாகும்.

**ஆயிரக்கால் மண்டபம் :**

வீரவசந்தராயர் மண்டபத்தைச் சார்ந்து வடபுறம் எடுப்பான மண்டபம் ஒன்று காட்சி யளிக்கும். இதுவே ஆயிரக்கால் மண்டபமாகும். இம்மண்டபத்தில் 985 கற்றூண்கள் வரிசையாக உள்ளன. எஞ்சிய 15 தூண்கள் இருக்க வேண்டிய இடத்தில் இரு சிறு கோவில்கள் அமைந்துள்ளன. இத்தூண்கள் எங்கு நின்று நோக்கினும் முன்பின் ஞக இல்லாமல் ஒவ்வொரு வரிசையாகக் காட்சி வழங்குவது வியப்பிற்குரியது. இம்மண்டபத்தைத் தளவாய் அரியநாத முதலியார் கி. பி. 1569இல் கட்டுவித்தார். இம்மண்டபத்தின் நுழைவாயிலில் தோன்றல் அரியநாத முதலியார் குதிரைமீது பெரு மிதத்தோடு அமர்ந்திருப்பது போன்று அமைத் திருக்கும் சிற்பக் காட்சி வியத்தற்குரியது.

**மங்கையர்க்கரசி மண்டபம் :**

வீரவசந்தராயர் மண்டபத்தினின்று தெற்கு நோக்கிச் சென்ருல், புதியதாக உருவாகப்பெற்ற மங்கையர்க்கரசி மண்டபம் தோற்றமளிக்கும். இஃது இக்காலக் கட்டடக் கலேயின் சிறப்பை எடுத்துக் காட்டும் வண்ணம் அமைக்கப்பெற்றது.

**திருக்கலியாண மண்டபம் :**

மங்கையர்க்கரசி மண்டபத்திற்குத் தென்புறம் மருதுபாண்டியரால் கட்டப்பெற்ற ஒரு மண்டபம் காணப்படுகின்றது. இது 'சேர்வைக்காரர் மண்டபம்' என வழங்கப்படுகின்றது. இம்மண்டபத்தில் பெரிய மருதுவின் உருவச் சிலே உள்ளது. இம்மண்டபத்திற்கு எதிரே அமைந்திருப்பது திருக்கலியாண மண்டபம். இதில் அங்கயற்கண்ணி அம்மைக்குத் திருக்கலியாணம் நடைபெறும் மேடையும், கருங்கல் மண்டபமும் காணப்படுகின்றன. இம்மண்டபத்தை விரிவுபடுத்தும் முறையில் பெரிய கூடம் ஒன்றும் இதனேயொட்டிப் பின்னர் அமைக்கப்பெற்றுள்ளது.

**மண்டப நாயகமும் கம்பத்தடி மண்டபமும் :**

வீரவசந்தராயர் மண்டபத்தைக் கடந்து சுவாமி திருமுன்பிற்கு நேராகச் சென்ருல், சுவாமி கோவிலின் இரண்டாம் திருச்சுற்றினே அடையலாம். இத்திருச்சுற்றின் வெளிச்சுற்று மதில் சுந்தரபாண்டியன் மதில் எனப்படும்; உட்சுற்று மதில் கபாலி மதில் என்று பெயர்பெறும். இக்கபாலி மதில் திருஞான சம்பந்தரால் குறிக்கப்பெற்ற பெருமையுடையது. இத்திருச்சுற்றின் மேற்புற

மூலேயில் சங்கத்தார் கோவில் உள்ளது. அங்குச் சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மரின் திருவுருவங்கள் வைக்கப் பெற்றுள்ளன.

இத்திருச்சுற்றின் வடகிழக்கு மூலேயில் அமைந்துள்ள மண்டபம் மண்டபநாயகம் என வழங்கப்படும். மண்டபங்களில் எல்லாம் சிறப்புடையது என்பது தோன்ற இது மண்டபநாயகம் எனப்பெயர் பெற்றது. இத்திருச்சுற்றில் சுவாமி திருமுன்புக்கு எதிரில் கண்டோரை வியப்புக் கடலுள் மூழ்கச் செய்யும் கம்பத்தடி மண்டபம் உள்ளது.

**ஆறுகால் பீடம்:**

கம்பத்தடி மண்டபத்தினின்று உள்ளே செல்லின் முதல் திருச்சுற்றை அடையலாம். இத்திருச்சுற்றிலும் ஆறுகால் பீடம் அமைந்துள்ளது. இவ்வறுகால் மண்டபம், பரஞ்சோதி முனிவரால் இயற்றப்பெற்ற திருவிளேயாடற் புராணம் அரங்கேற்றப்பெற்ற சிறப்பை உடையது. இத்திருச்சுற்றில் நாயன்மார் அறுபத்துமூவருடைய திருவுருவங்கள் காட்சியளிக்கின்றன.

**மகா மண்டபமும் கருவறையும்:**

ஆறுகால் பீடத்தின் வழியாகச் சொக்கநாதர் திருமுன்புக்குச் செல்லும்போது, மகாமண்டபத்தை அடையலாம். இம்மகாமண்டபம் 'வெள்ளியம்பலம்' எனப்படும். கால்மாறி ஆடிய நடராசர் திருவுருவம் இங்கே அழகொழுகக் காட்சியளிக்கின்றது. இம்மண்டபத்தை அடுத்து அர்த்த மண்டபமும், கருவறையும் அமைந்துள்ளன. இக்கருவறை

'இந்திர விமானம்' என்று வழங்கப் பெறும். ஒவ்வொரு பக்கத்திலும் இரண்டு யானைகள் வீதம் எட்டு யானைகள் தாங்குவன போல இவ்விமானம் அமைக்கப்பெற்றுள்ளது. பக்கத்துக்கு எட்டுச் சிங்கங்கள் வீதம் முப்பத்திரண்டு சிங்கங்களும், பக்கத்துக்குப் பதினாறு பூதகணங்கள் வீதம் அறுபத்துநான்கு பூதகணங்களும் உள்ளன. இத்தகைய சிறப்புடைய இந்திர விமானத்தில் சொக்கநாதப் பெருமான் இலிங்க வடிவத்தில் காட்சியருளுகின்றார்.

**ஆடி வீதிகள் :**

மீனாட்சியம்மன் திருக்கோவிலைச் சுற்றிக் கோபுர வாயில்களை இணைத்துப் பெரிய மதில் எழுப்பப் பெற்றுள்ளது. இம்மாபெரும் மதில் 260 மீட்டர் நீளமும், 244 மீட்டர் அகலமும் கொண்டது. இம்மதிலைச் சார்ந்திருக்கும் ஆடி வீதிகள், சுவாமி கோவில், அம்மன் கோவில் ஆகிய இரு கோவில்களையும் ஒருங்கே வலம் வருவதற்கு ஏற்ற வகையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்வீதிகளில் கோவில் நூல்நிலையம், இறைபணியாளர் அலுவலகம், திருப்பணிக் குழு அலுவலகம், சிவகங்கைத் தேவத்தான அலுவலகம், யானை கட்டும் இடம் முதலியன இடம் பெற்றுள்ளன.

வடக்காடி வீதியில் கோபுரத்தை அடுத்து ஒரே கல்லில் செதுக்கப் பெற்ற ஐந்து தனித் தூண்கள் காணப்படுகின்றன. இத்தூண்களை ஒட்டிச் சில சிறிய தூண்களும் காணப்படுகின்றன. இத்தூண்களைத் தட்டினால், ஒவ்வொரு தூணும் ஒவ்வொரு விதமான இசையினைத் தோற்றுவிக்கும்.

இதனுல்; இவைகள் இசைத் தூண்கள் எனப்படு கின்றன.

## * கோபுரங்கள்

**கோபுரங்கள் :**

மீனுட்சியம்மன் திருக்கோவிலுக்குப் பேரழகைத் தந்து நிற்பவை, மாபெரும் கோபுரங்கள் என்பது வெள்ளிடை மலையாம். இக்கோவிலில் நான்கு திசைகளிலும் அமைந்துள்ள நான்கு கோபுரங்களும் உயர்ந்தோங்கி வானை முட்டும் தோற்றத்தோடு எழிலொழுகக் காட்சி தந்து நிற்கின்றன. அவை தொலைவில் வருவோர்க்கு வரவேற்புக் கூறுவன போன்று இன்பக் காட்சி வழங்குகின்றன. அவைகளில் காணப்படும் சிற்ப வேலைப்பாடுகள் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரவல்லன என்று கூறுவது புனைந்துரை அன்று.

**கிழக்குக் கோபுரம் :**

சுவாமி திருமுன்புக்கு நேர் எதிரே கிழக்காடி வீதியினைச் சார்ந்து அமைந்துள்ள கீழைத் திருவாயிலின் மேலே அமைக்கப்பெற்ற கோபுரம் கிழக்குக் கோபுரமாகும். பெரிய கோபுரங்கள் நான்கினும் காலத்தால் பழமை வாய்ந்த கோபுரம் இதுவேயாம். இது மாறவர்மன் சுந்தரபாண்டியனுல்

---

* கோபுரங்களை மாடங்கள் என்று கூறும் வழக்கு உண்டு என்பது பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றது. ஆகவே, மீனுட்சியம்மன் கோவிலில் காணப்பெற்ற நான்கு மாடங்களின் காரணமாக நான்மாடக்கூடல் என்னும் பெயர் அமைந்திருக்குமோ என்பது சிந்திப்பதற்குரியது.

(கி. பி. 1216—38) கட்டப்பெற்றது. ஆதலின், இதற்குச் சுந்தரபாண்டியன் கோபுரம் என்னும் பெயரும் அமையலாயிற்று. இக்கோபுரத்தில் 1011 சுதையுருவங்கள் உள்ளன.

**தெற்குக் கோபுரம் :**

மீனாட்சியம்மன் திருக்கோவிலில் உள்ள கோபுரங்களுள் இதுவே மிகவும் உயரமானது. இக்கோபுரத்தைக் கி. பி. 1559இல் சிராமலைச் செவ்வந்தி மூர்த்தி என்பார் கட்டுவித்தார். இஃது ஏறத்தாழ 50 மீட்டர் உயரமும், 30 மீட்டர் அகலமும் கொண்டது. இக்கோபுரத்தில் 1511 சுதை யுருவங்கள் உள்ளன.

**மேலைக் கோபுரம் :**

இக்கோபுரத்தை எழுப்பிய பெருமை சான்றவன் பராக்கிரம பாண்டியன் (கி. பி. 1315—1347). இக்கோபுரத்தில் 1124 சுதையுருவங்கள் காணப்படுகின்றன.

**வடக்குக் கோபுரம் :**

இஃது ஒன்பதுநிலைக் கோபுரமாகும். இது 'மொட்டைக் கோபுரம்' என்றும் வழங்கப்படும். இதனைக் கட்டுவித்த பெருமை பெற்றவர் கிருஷ்ண வீரப்ப நாயக்கர் (கி. பி. 1564—72). இக்கோபுரம் மேற்பூச்சு நடைபெறாமல் நின்று போயிற்று. அதனாலேயே இதனை மொட்டைக் கோபுரம் என்று அழைத்தனர் போலும்! இதில் 404 சுதைவடிவங்கள் உள்ளன. இக்கோபுரத்தில் சுதையுருவங்கள் குறைவாக இருப்பதனால், இது மொட்டைக் கோபுரம்

என்று வழங்கப்பெறலாயிற்று என்று கருதுவாரும் உண்டு.

மீனுட்சியம்மன் கோவிலில் எட்டுச் சிறிய கோபுரங்களும் உள்ளன. அவைகளுள் சித்திரக் கோபுரம், வேம்பத்தூரரார் கோபுரம், நடுக்கட்டுக் கோபுரம், இடபக் குறியிட்ட கோபுரம் முதலியன குறிப்பிடத்தக்கன.

## சிற்ப ஓவியச் சிறப்புக்கள்

மதுரைத் திருக்கோவில் எழிலொழுகும் ஒரு கலைக்கூடம் என்னலாம். இக்கோவில் சிற்பங்கள், சிற்பக்கலையின் உயர்வையும், ஓவியங்கள், ஓவியக் கலையின் சிறப்பையும், கோவில், கட்டிட அமைப்புக் கலையின் பெருமையினையும் இனிது உணர்த்த வல்லனவாம்.

## சிற்பக் காட்சிகள்

மீனுட்சியம்மை திருக்கோவிலில் உள்ள சிற்பங்கள் அனைத்தும் கண்டோர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இயல்புடையன. இவற்றுள் சுவாமி திருமுன்புக்குமுன் கம்பத்தடி மண்டபத்துள் காணப்பெறும் சிற்பங்கள் ஒருவரை மெய்ம்மறக்கச் செய்யும் தன்மையுடையன. அங்கே உள்ள நந்தி மண்டபம், பலிபீடம், தங்கக்கொடிக் கம்பம் ஆகிய இவற்றைச் சுற்றியுள்ள உயரமான எட்டுக் கருங்கல் தூண்களிலும் இறைவனின் பல்வேறு வகைப்பட்ட தோற்றங்கள் சிற்பங்களாக வடிக்கப் பட்டுள்ளன. பிற தூண்களிலும் சிறந்த வேலைப் பாடுகள் அமைந்த சிற்பங்கள் உள்ளன. மீனுட்சி

யம்மையின் திருமணக்கோலத்தைச் சித்திரித்துக் காட்டும் உயரிய சிற்பம் மிக்க புகழ் வாய்ந்தது. இச்சிற்பம் இக்கம்பத்தடி மண்டபத்திலேயே அமைந்துள்ளது. இச்சிற்பத்தில் திருமணக் கோலத்தில் காட்சிதரும் சிவபெருமானின் எடுப்பான தோற்றமும், மணமகள் திருக்கோலத்தில் காட்சி நல்கும் மீனுட்சியம்மையின் நாணமும் புன்னகையும் கொண்ட முகத்தோற்றத்தின் பொலிவும் உள்ளத்தை அள்ளும் கலையழகோடு விளங்கித் திகழ்கின்றன. இச்சிற்பம் முதல் தூணில் அமைந்துள்ளது. இத்தூணில் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், சோமசுந்தரரும் உள்ளனர். பிற தூண்களில் மார்க்கண்டேயர் பொருட்டுக் காலனைக் கொல்லும்காட்சி, சுகஆசனர் திருவுருவம், நடராசர், இடப ஊர்தியில் சிவபெருமான், மால் அடிகாணுச் சிவபெருமான், இராவணன் கைலை மலையைத் தூக்கும் காட்சி, அர்த்தநாரீசுவரர், யானைத்தோல் போர்த்திய சிவபெருமான், சண்டேசுவரர்க்கு மாலையிடும் சிவபெருமான் ஆகியவை, சிறந்த சிற்பங்களாகக் காட்சி வழங்குகின்றன. சில தூண்களில் திருமாலின் தசாவதாரக் காட்சிகள் காணப்படுகின்றன.

இங்கே அமைந்துள்ள நந்தி மண்டபம் மிக நுட்பமான வேலைப்பாடு கொண்டது. இம் மண்டபத்தின் நான்கு தூண்களுக்கு மேலுள்ள சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட பரப்புக்கல், ஒரே கல்லால் ஆனது. கம்பத்தடி மண்டபத்திற்குக் கிழக்கில் வடபுறமும் தென்புறமும் அமைந்துள்ள நான்கு தூண்களில் அக்கினி வீரபத்திரர், அகோர

வீரபத்திரர், ஊர்த்துவ தாண்டவர், வாதாடும் பத்திரகாளி ஆகிய சிற்ப வடிவங்கள் எடுப்பான தோற்றப் பொலிவோடு விளங்குகின்றன.

ஆயிரக்கால் மண்டபம் சிற்ப வேலைப்பாடுகளின் திட்ப நுட்பங்கள் செறிந்த அரியதொரு கலைக் கூடமாகும். இங்கே கண்ணைக் கவரும் வண்ண வண்ணச் சிற்பங்கள் அமைந்துள்ளன. இம்மண்டபத்தின் முன்வரிசைத் தூண்களிலே அசுரனைக் கொல்லும் சிவபெருமான், கண்ணப்ப நாயனுர், பிச்சாடனர், தளவாய் அரிய நாதர், அரிச்சந்திரன், சந்திரமதி, குறவன், குறத்தி ஆகிய சிற்பங்கள் உள்ளன. தோன்றல் அரியநாதரின் சிற்பமானது சிற்பக் கலையின் நுட்பம் செறிந்த உயரிய சிற்பமாகப் போற்றப்படுகின்றது* மண்டபத்தின் உள்ளே பாண்டியன், துவார பாலகர்கள், கலைமகள், திருமால், அருச்சுனன், தருமர், பீமன், திரௌபதி, இரதி, மன்மதன், மோகினி ஆகிய சிற்பங்களும் பிறவும் கண்கவரும் அழகுடையனவாக விளங்கிப் பொலிகின்றன. நுழைவாயிலின் மேல் விதானத்தில் தமிழ் ஆண்டுகள் அறுபதினையும் சித்திரிக்கும் சக்கரம் ஒன்றும் செதுக்கப்பட்டுள்ளது.

வீரவசந்தராயர் மண்டபத்தில் கீழ்ப்புறம் அமைந்த தூண்களில் மார்க்கண்டேயருக்காகக் காலனை ஒறுத்த சிவபெருமான், வேடன் ஒருவன் தன் மனைவியைத் தோளில் தூக்கி வைத்திருத்தல், சிவபெருமானின் வீரத் தோற்றம், நடனமாடும்

---

* மதுரை மீனுட்சி கோவில் – பேராசிரியர் K. S. ஸ்ரீ கண்டன் எம். ஏ.

பத்திரகாளி போன்ற சிற்பங்கள் கலையழகோடு காணப்படுகின்றன. இச்சிற்பங்கள் அனைத்தும் இம்மண்டபத்திற்குப் பேரழகைத் தந்து நிற்கின்றன.

அட்டசக்தி மண்டபத்திலும் அழகிய சிற்பங்கள் அமைந்துள்ளன. இம்மண்டபத்தில் அட்டலட்சுமிகளின் சிலைகள் அழகுபெறக் காணப்படுகின்றன. இவற்றைத்தவிர, துவாரபாலகிகளின் உருவங்களும், வல்லப கணபதி, சண்முகர் ஆகியவர்களின் திருவுருவங்களும் சிற்பங்களாக வடிக்கப் பெற்றுள்ளன. அட்டசக்தி மண்டபத்தையும் மீனாட்சி நாயக்கர் மண்டபத்தையும் இணைக்கும் மண்டபத்தில் பார்வதி அம்மையின் உருவமும், அதற்கு எதிரே வேட்டுவன் பறவை, குரங்கு, வலை ஆகியவற்றுடன் நிற்கும் உருவமும் எடுப்பான தோற்றத்தை உடையனவாகும். முதலிப்பிள்ளை மண்டபத்திலும் வனப்பு வாய்ந்த சிற்பங்கள் பல இடம் பெற்றுள்ளன. அங்குள்ள தூண்களில் அமைந்த சிற்பங்கள் அனைத்தும் புராண வரலாறு ஒன்றைக் குறிப்பனவாகும்.

பொற்றாமரைக் குளத்தின் வடபால் அமைந்துள்ள மண்டபத் தூண்களில் சங்கப் புலவர்களின் உருவங்கள் செதுக்கப் பெற்றுள்ளன. நாற்பத்தொன்பது கடைச்சங்கப் புலவர்களில் இருபத்து நான்கு புலவர்களின் உருவங்களே அங்குச் செதுக்கப் பெற்றுள்ளன. அவ்வுருவங்கள் ஏடும் எழுத்தாணியும் தாங்கிய கையை உடையனவாகச் சித்திரிக்கப் பெற்றுள்ளன. பொற்றாமரைக் குளத்தின் கரையில் முதன் முதலில் மதுரைக் கோவிலினை

யும், மதுரை மாநகரினையும் அமைத்த குலசேகர பாண்டியனின் திருவுருவம் ஒரு தூணில் பொறிக்கப் பெற்றுள்ளது. மற்றொரு தூணில் கடம்பவனத்தில் இலிங்க வடிவத்தைக் கண்டு பாண்டிய மன்னனுக்கு அறிவித்த தனஞ்சயனின் உருவமும் பொறிக்கப் பெற்றுள்ளது.

கிளிக்கூட்டு மண்டபத்தில் உள்ள 28 தூண்களும் நுண்ணிய சிற்ப வேலைப்பாடுகள் கொண்டவை. இத்தூண்களில் பஞ்சபாண்டவர், திரௌபதை உருவங்களும், வாலி, சுக்ரீவன் ஆகியோர் உருவங்களும் அமைக்கப் பெற்றுள்ளன. இம்மண்டபத்தினுடைய தூண்களுக்கு மேலுள்ள விட்டங்களில் இறைவனுடைய அறுபத்துநான்கு திருவிளையாடல்களும் கருங்கற்களில் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவைகள் சிறியனவாக இருப்பினும், கலையுணர்வு தோன்ற அமைக்கப் பட்டிருக்கின்றன.

அம்மன் கோவில் மகாமண்டபத்தில் அமைந்த தூண்களும் விட்டங்களும் அருமையான சிற்ப வேலைப்பாடுகளைக் கொண்டவை. சுவாமி கோவிற் கண் அமைந்த மண்டப நாயகமும் அரிய வேலைப் பாடுகளைக் கொண்டது. இம்மண்டபத்தில் நடராசர் திருவுருவச்சிலை உள்ளது. கம்பத்தடி மண்டபத்தி னின்றும் உள்ளே செல்லும் நுழைவாயிலின் இரு புறங்களிலும் 3 மீட்டர் உயரமுள்ள ஒரே கல்லில் செதுக்கப்பெற்ற துவாரபாலகர்களின் சிலைகள் உள்ளன. கோவிலுக்கு உள்ளே நுழையுமிடத்தில் சமயகுரவர் நால்வரின் சிலைகள் காணப்படு கின்றன. இங்குள்ள அறுகால் பீடத்தை நோக்கி

எதிரில் அமைந்துள்ள தூண்களில் பதஞ்சலி முனிவரும் வியாக்கிரபாத முனிவரும் கைகூப்பிய வண்ணம் நிற்கின்றனர்.

சித்திர கோபுரத்திலும் வேலைப்பாடுகள் மிக்க அழகிய சிலைகள் உள்ளன. பிற சிறிய கோபுரங் களிலும் அழகிய சிற்பச் சிலைகளும், சுதையுருவங் களும் பொருந்தியுள்ளன.

இக்கோவிலில் அமைந்துள்ள பெரிய கோபுரங்கள் நான்கும் உயர்ந்த சிற்பக் கலையழகு பொருந்தியவை. இக்கோபுரங்கள், சிற்பக்கலை விதிப்படி உத்தம கோபுரங்களின் விதிகளைத் தழுவி எழுந்தவை. இவைகளில் உள்ள சுதையுருவங்கள் மிக்க அழகு வாய்ந்தவை. அவைகளின் உறுப் புக்கள் சிறந்த வேலைப்பாடுகள் கொண்டவை. புராணக் கதைகளை விளக்க வல்ல சிற்பங்களும் இக்கோபுரங்களில் நிரம்பியுள்ளன. சுருங்கக் கூறின், கோவிலுக்குள் கருங்கல்லில் செதுக்கப்பட்ட சிற்பங்கள் அனைத்தும் கோபுரங்களில் சுண்ணும்பி ளுலும் கற்களாலும் அமைத்துக் காட்டப் பெற் றுள்ளன என்னலாம். இக்கோபுரங்கள் பார்வைக்கு ஒன்றுபோல் காணப்படினும் வேலைப்பாட்டால் ஒன்றுக்கொன்று வேறுபாடு உடையன.

சிற்ப நூல் விதிப்படி கிழக்குக் கோபுரமும் மேற்குக் கோபுரமுமே மிக்க மேன்மை பொருந்தி யவை. கிழக்குக் கோபுரம் **இந்திரவிமானம்** என்றும், மேற்குக் கோபுரம் **வருண விமானம்** என்றும் பெயர் பெறும். இந்திய நாட்டுக் கோவில் கோபுரங்களி லெல்லாம் **மேற்குக் கோபுரமே** சிறந்த **அழகுடை**

யது.* இக்கோபுரத்தின் வெளிப்புறத்தில் புராணக் கதைகள் சுண்ணும்பால் அமைக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் தேவரும் அசுரரும் கடலினைக் கடையும் உருவங்கள் கவின்பெறக் காட்சி வழங்குகின்றன. வாசுகி நஞ்சினைக் கக்குவதும், சிவபெருமான் விழுங்கச் செல்வதும், பார்வதி பரமசிவனின் கழுத்தை இறுகப் பற்றிக் கொண்டிருப்பதும் வியக்கத்தகும் பேரழகோடு விளங்குகின்றன. கோபுரத்தில் வேலைப்பாடுகள் கொண்ட உருவங்கள் எம்மருங்கும் நிறைந்து காணப்படுகின்றன. வடக்குக்கோபுரத்தில் இந்திய நாட்டில் ஆங்காங்குக் காணப்பெறும் விமான அமைப்புக்களுள் பல காட்டப் பெற்றுள்ளன. இவை சிற்ப நூல் வல்லார்க்கு அரியதொரு விருந்தாக அமையும்.

## ஓவியக் காட்சிகள்

அட்டசக்தி மண்டபத்தில் எழில் பொருந்திய ஓவியங்கள் காட்சி தருகின்றன. அவை திருவிளையாடற் கதைகள் சிலவற்றை விளக்குவன. மீனாட்சியின் திருவவதாரம், முடிசூட்டு விழா, அரசாட்சி, சிவபெருமானுடன் போர் புரிதல், சுந்தரரும் மீனாட்சியும், சோமசுந்தரர் ஆட்சிபுரிதல், உக்கிர பாண்டியனின் திருவவதாரம், முடிசூட்டு விழா, அரசாட்சி ஆகிய திருவிளையாடல்கள் ஓவியங்களில் சித்திரிக்கப் பெற்றுள்ளன. பொற்றாமரைக் குளத்தின் வடக்குக் கரையிலும் கிழக்குக் கரையிலும் மண்டபச் சுவர்களில் அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் குறிக்கும் வண்ண ஓவியங்கள்

* மதுரை மீனாட்சி கோவில் — பேராசிரியர் K. S. ஸ்ரீகண்டன் எம். ஏ.

எழுதப்பெற்றுள்ளன. வடப்புறச் சுவரில் சுவாமி கோவில், அம்மன்கோவில்களின் மாதிரிச் சித்திரங் களும் வரையப் பெற்றுள்ளன. ஊஞ்சல் மண்ட பத்தில் அமைந்துள்ள ஊஞ்சல்மேடைக்குமேலுள்ள சுற்று விட்டங்களில் முருகப் பெருமானின் ஆறு படை வீடுகளும் சித்திரங்களாகத் தீட்டப்பெற் றுள்ளன. இவ்வூஞ்சல் மண்டபத்தின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள நிலைமாடத்தின் விதானத் தில் அரசி மங்கம்மாள் காலத்தில் வரையப்பட்ட வண்ண ஓவியங்களும் காணப்படுகின்றன.

கிளிக்கூட்டு மண்டபத்தின் மேல்விதானத்தில் பல தெய்வங்களின் தோற்றங்கள் அழகிய ஓவியங் களாக வரையப் பெற்றுள்ளன. அம்மன் திருமுன் புக்கு நேராக மீனாட்சியம்மையின் திருக்கலியாணச் சித்திரம் கண்ணையும் கருத்தையும் ஈர்க்கும் வண்ணம் தீட்டப்பட்டுள்ளது. வேம்பத்தூரார் கோபுரத்திலும் அழகிய ஓவியங்கள் அமைந் துள்ளன. இக்கோபுர வாயிலின் உட்புறத்தில் மீனாட்சி சுந்தரர் திருமணக் கோலத்தையும், மீனாட்சி முடிசூட்டுங் கோலத்தையும் விளக்கும் அழகிய ஓவியங்கள் பலகையில் எழுதப்பெற்றுள் ளன. வெள்ளியம்பலம் எனப்படும் மகாமண்டபத் தில் வெள்ளியம்பலம், பொன்னம்பலம், இரத்தின சபை, தாமிரசபை, சித்திரசபை ஆகிய இடங்களில் வண்ண ஓவியங்கள் பலகைகளில் வரையப்பெற் றுள்ளன. திருக்கலியாண மண்டபத்துள் மேடைக் குத் தென்புறமும் வடபுறமும் உள்ள சுவர்களில் அண்டங்களின் தோற்றத்தையும் உயிரினங்களின் தோற்றத்தையும் குறிக்கும் இரண்டு ஓவியங்கள்

பெரிய வட்ட வடிவில் அமைந்துள்ளன. கூடத்தின் மேலே உள்ள உத்தரப் பகுதிகளில் திருவிளையாடற் சித்திரங்கள் காட்சியளிக்கின்றன. நுழை வாயிலிலே பெரிய நிலைக்கண்ணாடிப் பெட்டிகளிலும் ஓவியங்கள் காணப்பெறுகின்றன.

## கல்வெட்டுக்கள்

மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் நாற்பத்து நான்கு கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவை அரசினரால் படி எடுக்கப்பெற்றுள்ளன. அவை பராக்கிரம பாண்டியன், திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகரதேவர், திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தர பாண்டியதேவர், மாறவர்ம பாண்டியன், திரிபுவனச் சக்ரவர்த்தி வல்லபதேவர், பாண்டியன் திரிபுவனச் சக்ரவர்த்தி கோனேரின்மை கொண்டான், வீரப்பநாயக்கர், விசுவநாதநாயக்கர், திருமலைநாயக்கர் முதலிய பலருடைய காலத்தைச் சார்ந்தவையாகும்.

***கூடலழகர் கோவில் :**

இது மதுரை மாநகரில் அமைந்துள்ள சிறந்த வைணவக் கோவிலாகும். இது மேற்குமாசி வீதியும்

---

* கூடலழகர் கோவில் அமைந்துள்ள பகுதி, இருந்தையூர் என்று பெயர் பெற்றிருக்கலாம் என்று தோற்றுகின்றது. செந்நாப் புலவர் ஆ. கார்மேகக் கோனார் அவர்களும் இக்கருத்தினையே கொண்டிருந்தனர். பரிபாடலில் கூறப்படும் இருந்தையூர் இதுவாகவே இருத்தல் கூடும். இருந்தவளமுடையார் இருக்கும் ஊர் இருந்தவூர் என்று பெயர் பெற்றிருக்க வேண்டும். அப்பெயர் இருந்தையூர் எனத் திரித்து வழங்கப்பட்டிருக்கலாம். இருந்தையூர்க் கருங்கோழி மோசியார் என்னும் புலவர் இவ்வூரைச்சார்ந்தவராகலாம். முனிச்சாலை என்ற

தெற்கு மாசி வீதியும் சந்திக்கும் இடத்திற்கு அண்மையில் உள்ளது. இங்குள்ள திருமால், இருந்த கோலம், நின்ற கோலம், கிடந்த கோலம் ஆகிய மூன்று கோலங்களிலும் காட்சி தருகின்றார். கோவில் மூலவரின் பெயர் கூடலழகர் என்பது. அவர் ஸ்ரீதேவி, பூமிதேவிகளுடன் அமர்ந்த திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். மூலவர் கோவிலின் மேல், அட்டாங்க விமானம் அமைந்திருக்கின்றது. அவ்விமானத்தில் இரண்டு மாடிகள் உள்ளன. முதல் மாடியில் நெடுமால் நின்ற கோலத்திலும், இரண்டாவது மாடியில் பள்ளி கொண்ட திருக்கோலத்திலும் காணப்படுகின்றார்.

இப்பெருமாள் திருமுன்புக்குத் தென்பால் மதுரவல்லித் தயாரின் திருமுன்பு அமைந்துள்ளது; வடபால் ஆண்டாள் திருமுன்பு அமைந்திருக்கின்றது. கூடலழகர் கோவில் மிகவும் பழமை வாய்ந்த கோவில். இக்கோவில் திருமங்கை ஆழ்வார், திருமழிசை ஆழ்வார், பெரியாழ்வார் ஆகியவர்களின் திருப்பாடல்களைப் பெற்ற சிறப்புடையதாகும். இக்கோவிலில் பல சிற்பங்களும், கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன.

குரவைக் கூத்தின் முடிவில் மாதரி நெடுமாலை வழிபடச் சென்றதாகச் சிலப்பதிகாரம் செப்புகின்றது. அவள் வழிபடச் சென்ற நெடுமாலின் திருப்

---

இடத்தில் அந்தர வானம் தண்ணீர்ப்பந்தல் தெரு என்று ஒரு தெரு அமைந்திருக்கின்றது. இது கூடலழகர் பெருமானுக்கு அந்தரவானத்தெம்பெருமான் என்னும் பெயர் அமைந்திருந்ததனை விளக்குவதற்கு ஒரு சான்றாக அமைகின்றது.

பெயரை அரும்பதவுரையாசிரியர் ஸ்ரீ இருந்தவள முடையார் என்றும், அடியார்க்கு நல்லார் அந்தர வானத் தெம்பெருமான் என்றும் கூறுவர். இவர்கள் இருவரும் கூடலழகரையே குறிப்பிடுகின்றனர் என்னலாம். இ ரு ந் த கோலத்தில் காணப்படும் பெருமான் ஸ்ரீ இருந்தவளமுடையார் என்றும், விமானத்தில் காணப்படும் பெருமான் அந்தரவா னத் தெம்பெருமான் என்றும் பெயர் பெற்றனர் போலும் !

**திரு ஆப்புடையார் கோவில் :**

இக்கோவில் வையையாற்றின் வடகரையில் செல்லூரில் இருக்கின்றது. இக்கோவிலின் பழங் காலப் பெயர் திரு ஆப்பனூர் கோவில் என்பது. இங்குள்ள பெருமானின் பெயர் திரு ஆப்புடையார் என்பது. அம்மையின் பெயர் குரவம் கமழ் குழல் அம்மை என்பது. இது, சோழாந்தகன் என்னும் பாண்டியன் பொருட்டுச் சிவபெருமான் ஓர் ஆப்பி னிடத்தில் தோன்றியருளிய இடமாகும். அதனு லேயே இப்பெருமானுக்கு ஆப்புடையார் என்னும் பெயர் அமையலாயிற்று. இப் பெருமானுக்கு அன்னவிநோதன் என்னும் பெயரும் உண்டு என்று தலபுராணம் கூறுகின்றது. அருச்சகராகிய சைவ வேதியர் வையையாற்று மணலை உலையிலிட, அதனை அன்னமாக ஆக்கியமையே இதற்குரிய காரண மாகும். திரு ஆப்பனூர், ஞானசம்பந்தப் பெரு மானின் பாடல் பெற்ற இடமுமாகும். அவர்,

'அந்தண் புனல்வையை அணி ஆப்பனூர்'

என்று கூறுவதனுல், திருஆப்பனூர் வையைக் கரை யில் இருந்தது என்பது தெளிவு. இவ்வாப்பனூர்

ஆ + புடை.

இன்றும் வையைக் கரையிலே அமைந்திருப்பதனைக் காண்க.

**இம்மையில் நன்மை தருவார் கோவில்:**

இக்கோவில் மேலமாசி வீதியின் தென்கோடியில் அமைந்திருக்கின்றது. சிவபெருமான் சுந்தர பாண்டியனாக மனித வடிவந் தாங்கித் தடாதகைப் பிராட்டியாரை மணந்து பாண்டி நாட்டை ஆட்சி புரிந்து வந்தார். அவர் இக்கோவிலில் சிவபூசை செய்ததாகத் திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. இக்கதைக்கு ஏற்ப மீனாட்சி, சுந்தரேசுவரர் உருவச் சிலைகள் சிவலிங்கத்திற்குப் பின்புறத்தில் அமைந்திருக்கின்றன. இக்கோவிலும் பழமை வாய்ந்த கோவிலாகவே கருதப்படுகின்றது.

**செல்லத்தம்மன் கோவில்:**

இக்கோவில் வடக்கு மாசி வீதிக்கு அண்மையில் இருக்கின்றது. இக்கோவிலில் கண்ணகி ஒரு கையில் சிலம்புடன் அமர்ந்திருக்கும் உருவச்சிலை உள்ளது. இக்கோவிலைச் சூழ்ந்து ஆயர்குலப் பெருமக்கள் வாழ்ந்து வருகின்றனர். கோவிலில் கண்ணகியின் சிலை இருப்பதனாலும், சுற்றிலும் ஆயர் குலத்தவர் வாழ்ந்து வருவதனாலும், இவ்விடத்தில்தான் மாதரி (கண்ணகியை அடைக்கலமாகக் கொண்டவள்) வாழ்ந்திருத்தல் வேண்டும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

**நக்கீரர் கோவில்:**

இக்கோவில் மேலமாசி வீதியில் இருக்கின்றது. இக்கோவிலில் நக்கீரர் உருவச் சிலையும், மீனாட்சி சுந்தரேசுவரர் உருவச் சிலைகளும் காணப்படுகின்றன. இது சங்கத்தார் கோவில் என்றும்

வழங்கப்பட்டு வருகின்றது. இக்கோவிலின் திருச் சுற்றில் மக்கள் குடியிருந்து வருகின்றனர்.

**கிறித்தவக் கோவில்கள்:**

நகரில் பல இடங்களில் கிறித்தவக் கோவில் களும் அமைந்திருக்கின்றன. மதுரையையொட்டி இருக்கும் புதூரில் அதிமேற்றிராசனக் கோவில் அமைந்திருக்கின்றது. தூய மரியன்னை நிறுவனக் கோவிலும்[1] சிறப்பு வாய்ந்த கோவிலாக விளங்கு கின்றது. டவுண்கால்சாலையை அடுத்து ஒரு மாதா கோவில்[2] காணப்படுகின்றது. பிற்கூறிய இரு கோவில்களும் பழமை வாய்ந்தவை என்று கருதப் படுகின்றன. புகைவண்டிப் பணியாளர் குடியிருப்புக் கோவிலும்[3] ஞானஒளிவுபுரம் கோவிலும் அண்மைக் காலத்தில் அமைக்கப் பெற்றவை. இவையன்றிப் பொன்னகரம், மங்களபுரம், கிழக்கு வாயில் (East Gate)* அமெரிக்கன் கல்லூரி ஆகிய இடங்களில் புராட்டஸ்டாண்டு கோவில்களும் அமைந்து, நகருக்கு அழகு செய்கின்றன.

**மசூதிகள்:**

இந்நகரில் இருபத்தேழு மசூதிகள் அமைந் திருக்கின்றன. அவற்றுள் கோரிப்பாளையம், காஜிமார்தெரு ஆகிய இடங்களில் அமைந்துள்ள மசூதிகள் பழமை வாய்ந்தவை என்று கூறப்படு கின்றன.

---

1 St. Mary's Church 2. Rosary Church 3. Railway Colony Church.

*மதுரை மாநகரில் கிழக்கு வாயில், மேற்கு வாயில், தெற்கு வாயில், வடக்கு வாயில் என நான்கு இடங்கள் உள்ளன. இவைகளைக் கோட்டை மதிலின் வாயில்கள் இருந்த இடங்கள் என்று கூறு கின்றனர்.

**புதுமண்டபம்:**

கீழைக்கோபுர வாயிலுக்கு எதிரே கிழக்குச் சித்திரை வீதிக்கும், கீழ ஆவணிமூல வீதிக்கும் இடையில் அமைந்துள்ள மண்டபம் 'புதுமண்டபம்' எனப்படும். இம்மண்டபத்தை அமைத்தவர் திருமலைநாயக்கர்.

இது சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட அழகு வாய்ந்த மண்டபமாகும்.இது 110 மீட்டர் நீளமும் 35 மீட்டர் அகலமும் உடையது. இதில் கருங் கல்லால் ஆன 124 தூண்கள் நான்கு வரிசைகளாக அமைக்கப் பெற்றுள்ளன. அத்தூண்களில் பெரி யனவும் சிறியனவும் ஆகிய எழில் வாய்ந்த சிற்ப வடிவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இம்மண்ட பத்தில் கிழக்கிலும் மேற்கிலும் உள்ள தூண்களில் கண்ணைக்கவரும் வண்ணச் சிற்பங்கள் அமைந் துள்ளன. அவைகளுள் மீனாட்சியம்மையின் திருமணக்கோலம், பத்திரகாளி, நடராசர், இராவ ணன் கைலாயமலையைத் தூக்கிய காட்சி, சூரிய சந்திரர், கல்யானைக்குக் கரும்பளித்தது, கருங் குருவிக்கு உபதேசித்தது முதலியன குறிப்பிடத் தக்கன. இம்மண்டபத்தின் நடுவண் திருமலை நாயக்க மன்னர் உட்பட நாயக்கமன்னர் பதின்ம ருடைய உருவச் சிலைகள் அழகாகக் காட்சியளிக் கின்றன.

இம்மண்டபத்தின் மேற்புறத்தில் அழகான கருங்கல் மண்டபமும், மேடையும் அமைந்திருக் கின்றன. மேடை கருநாவல் பழம்போன்று கருமை யுடையதாய் வழுவழுப்பாகக் காணப்படுகின்றது. இம்மண்டபவேலை முடிவுற்றதும், திருமலைநாயக்கர்

பத்துநாட்கள் வசந்தவிழாவினை இதனில் நடாத்தினர். இம்மண்டபத்தில் இன்றும் வசந்தவிழா நிகழ்ந்து வருகின்றது. அதனால், இதற்கு வசந்த மண்டபம் என்னும் பெயரும் உண்டு.

**இராயகோபுரம்:**

புதுமண்டபத்திற்குக் கீழ்பால் பெரிய கோபுரம் ஒன்றன் அடித்தளத்தைக் காணலாம். இஃது இராயகோபுரம் எனப்படும். இக்கோபுர வேலை திருமலை நாயக்கரால் தொடங்கப்பட்டது. ஆயின் அப்பணி முடிவுபெறவில்லை.

**நகராமண்டபம்:**

அம்மையின் திருமுன்புக்கு நேராகக் கீழச் சித்திரை வீதியில் நகராமண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபத்தின் மேல் நாள்தோறும் நகரா அடிக்கப்பெறுவது வழக்கமாம். அதனால் இதற்கு நகராமண்டபம் என்னும் பெயர் உண்டாயிற்று என்பர்.

**விட்டவாசல்:**

சுவாமி திருமுன்புக்கு நேரே இராயகோபுரம் அமைந்திருப்பதுபோல, அம்மையின் திருமுன்புக்கு நேரே விட்டவாசல் எனப்படும் கட்டடம் ஒன்று உண்டு. இது பாண்டிய மன்னர்களின் பழைய கோட்டையைச் சார்ந்தது. நகரம் விரிவாக்கப் பட்டபொழுது, கோட்டைச் சுவர்கள் இடிக்கப்பட்டன. அச்சமயத்தில் இவ்வாயில் பகுதி மட்டும் இடிக்கப்படாமல் விட்டு வைக்கப் பெற்றது. அத

ஞல், இது விட்டவாசல் என வழங்கப்படலாயிற்று. இஃது இப்பொழுது இந்திய அரசின் பழம்பொருட் பாதுகாப்புத் துறையின் மேற்பார்வையில் இருந்து வருகின்றது.

**வண்டியூர்த் தெப்பக்குளம்:**

வண்டியூர்த் தெப்பக்குளம் மீனுட்சியம்மன் கோவிலுக்கு நேர் கிழக்காக மூன்று கி. மீட்டர் தொலேவில் அமைந்துள்ளது. இதற்கு மாரியம்மன் தெப்பக்குளம், பெரிய தெப்பக்குளம் என்னும் பெயர்களும் உண்டு. இத்தெப்பக்குளத்தில் நீர் அளவின் விஞ்சிப் பெருகும்பொழுது, அந்நீர் வெளியே செல்வதன் பொருட்டுச் சிங்கத்தின் பிளந்த வாயமைப்புக் கொண்ட தூம்புகள் அமைக்கப்பட்டுள்ளன.

இத்தெப்பக்குளத்தின் நடுவண் பெரிய கோபுரத்தை உடைய நடுமண்டபம் ஒன்று அமைக்கப் பெற்றுள்ளது. இக்கோபுரம் ஏழு நிலே களே உடையது. இம்மண்டபத்தைச் சுற்றி நான்கு மூலேகளிலும் கோபுரங்களோடு கூடிய நான்கு சிறிய மண்டபங்களும் உள்ளன. இந்நடுமண்ட பத்தைச் சூழ்ந்து நிழல் தரும் அழகிய மரங்களும், செடி கொடிகளும் நிறைந்து காணப்படுகின்றன. அவை அழகொழுகக் காட்சி தருகின்றன. திருமலே நாயக்க மன்னர் தாம் பிறந்த தைத் திங்கள் பூச நாளில் இத்தெப்பக்குளத்தில் விழா நிகழ்வதற்கு ஏற்பாடு செய்தார். அந்த விழா இன்றும் நிகழ்ந்து வருகின்றது. இங்ஙனம் நிகழ்ந்து வரும் அவ்விழா திருமலே நாயக்க மன்னரின் பிறந்தநாள் விழா என் பதனே இன்றும் பெரும்பாலான மக்கள் அறியார்.

**திருமலை நாயக்கர் மகால் :**

திருமலை நாயக்கர் மகால் வரலாற்றுச் சிறப்புடைய கட்டடமாகும். இம்மகாலில் அமைந்திருக்கும் தூண்கள் மிகவும் பெரியவை. மகாலின் உள்ளே நுழைந்ததும், காணப்படும் பெரிய தூண்கள் ஒவ்வொன்றும் ஏறத்தாழ 25 மீட்டர் உயரமும், 5 மீட்டர் சுற்றளவும் கொண்டது. நாளோலக்க இருக்கை, அரசியின் அந்தப்புரம் முதலியன அழகாக அமைக்கப்பட்டுள்ளன. இம்மகாலில் இப்பொழுது மதுரை, இராமநாதபுரம் நீதிமன்றங்கள் அமைந்திருக்கின்றன.

இம்மகாலுக்குச் சிறிது வடபால் பத்துக்கல் தூண் தெரு என்று ஒரு வீதி காணப்படுகின்றது. அதனில் கருங்கல்லால் ஆன பத்து உயரமான தூண்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு தூணும் ஏறத்தாழ இருபத்தைந்துமீட்டர் உயரமும், மூன்று மீட்டர் சுற்றளவும் கொண்டது. இத்தூண்கள் திருமலை நாயக்கரின் யானைகளைக் கட்டுவதற்காக நிறுவப்பெற்றவை என்று கூறப்படுகின்றது.

**நகராட்சி மன்றம் :**

மதுரைமாநகர் கி. பி. 1866இல் நகராட்சி மன்ற நகராக ஆயிற்று. இது முதல் நிலையான நகராட்சி மன்ற நகரமாகும். இங்குள்ள நகராட்சி மன்றம் திறம்படச் செயலாற்றி வருகின்றது. இதனுடைய அரும்பணியால் மதுரை மாநகரம் பொலிவோடு விளங்குகின்றது. இது நகரமைப்புக் கலையின்படி திட்டம் வகுத்துப் பணியாற்றி நகரின் மேன்மையினை உயர்த்தியுள்ளது; சிறந்த சாலை

களையும், தண்ணீர்த் திட்டம், கழிவு நீரேற்றும் திட்டம் போன்ற திட்டங்களையும், கல்விக் கூடங் களையும், பூங்காக்களையும் இன்ன பிறவற்றையும் நன்கு அமைத்துள்ளது. இந்நகராட்சி மன்றத்தின் நூற்றுண்டு விழா 1966ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

**மதுரைத் தமிழ்ச் சங்கம் :**

தமிழ் வளர்த்த பெருமையுடைய மதுரை மாநகரில், இன்றும் புதிய தமிழ்ச் சங்கம் ஒன்று அமைந்திருக்கின்றது. இச்சங்கம் வடக்குவெளி வீதிக்கு வடபால் அமைந்துள்ளது. இத்தமிழ்ச் சங்கம் இருக்கும் வீதிக்குத் ‘ தமிழ்ச் சங்க வீதி’ என்னும் பெயர் வழங்கி வருகின்றது.

இச்சங்கம் செந்தமிழ்ப் புரவலராகவும், பெருங் கொடைவள்ளலாகவும் விளங்கிய **பாண்டித்துரைத் தேவர்** அவர்களால் 1901ஆம் ஆண்டில் நிறுவப் பெற்றது. இச்சங்கத்தில் செந்தமிழ்க் கல்லூரியும், பாண்டியன் நூலகமும், நூல் ஆராய்ச்சித் துறை யும், அச்சகமும் அமைக்கப்பட்டன.

இச்சங்கம் உயர்ந்த **பண்டிதத் தேர்வை** நடத்தி வந்தது. இத்தேர்வு பிரவேச பண்டிதம், பால பண் டிதம், பண்டிதம் என மூன்று பிரிவுகளை உடையது. ஆழ்ந்தமைந்த புலமைக்கான பாடத் திட்டங் களும், பாடநூல்களும் இத்தேர்வுக்கு அமைந்திருந் தன. செய்யுள் இயற்றும் வினுத்தாள் ஒன்றும் இத் தேர்வுக்கு இருந்தது. இத்தேர்வில் முதன்மையாகத் தேறியவர்களுக்குப் பொற்பதக்கமும், பொற்கடக

மும், வெண்பொற் காசுகளும் பரிசாக வழங்கப் பட்டன.

இன்றும் செந்தமிழ்க் கல்லூரி நடைபெற்று வருகின்றது. ஆயின், பண்டிதத் தேர்வு நீக்கப் பட்டுவிட்டது. அதன் பொருட்டுப் புலவர் தேர்வு நடத்தப்பெற்று வருகின்றது. பாண்டியன் நூலக மும் செயல்பட்டு வருகின்றது. இச்சங்கத்தினின்று செந்தமிழ் என்னும் இதழொன்று சிறந்த கட்டு ரைகள் தாங்கி வெளிவந்தது. அவ்விதழ் இன்றும் வெளிவந்துகொண்டிருக்கின்றது. ஓலைச் சுவடிகளை ஆய்ந்து பதிப்பித்து வெளியிட்டுவந்த ஆராய்ச்சித் துறை இப்பொழுது செயல்படவில்லை.

**மதுரைப் பல்கலைக் கழகம் :**

மதுரைப் பல்கலைக் கழகம் 1966 ஆம் ஆண்டு பெப்ருவரித் திங்களில் தொடக்கமாயிற்று. இப் பல்கலைக்கழகம், மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி என்னும் நான்கு மாவட்டங்களுக்கும் உரியதாகும். சுருங்கக் கூறின், இது பழங்காலப் பாண்டிய நாட்டுக்கு உரிய பல் கலைக் கழகமாக மிளிர்கின்றது. பன்மொழிப் புலவ ராகிய தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் இப்பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக இருந்து அரும்பணி யாற்றி வருகின்ருர்.

**கல்விக் கூடங்கள் :**

மதுரை மாநகரம் கல்வியில் மேம்பட்டு விளங்கு கின்றது. இங்குக் கல்லூரிகளும், உயர்நிலைப் பள்ளிகளும், தொடக்கப் பள்ளிகளும், பிற கல்வி

நிலையங்களும் பல்கிப் பெருகியுள்ளன. இங்கு ஐந்து ஆண்கள் கல்லூரிகளும், மூன்று பெண்கள் கல்லூரி களுமாக எட்டுக் கலையியல் கல்லூரிகள் இருக்கின் றன. இவற்றுள் அமெரிக்கன் கல்லூரியும், மதுரைக் கல்லூரியும் பழைமை வாய்ந்தவை. ஏனையவை, தியாகராசர் கல்லூரி, ச. வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி, சரசுவதி நாராயணன் கல்லூரி, டோக் பெருமாட்டி கல்லூரி, பாத்திமா கல்லூரி, மீனாட்சி கல்லூரி என்பனவாகும். இவை தவிரப் பொறியியற் கல்லூரி, மருத்துவக் கல்லூரி, தொழில் நுட்பக் கல்லூரி, வேளாண்மைக் கல்லூரி ஆகியனவும் உள்ளன. இந்நகரில் ஏராளமான உயர்நிலைப் பள்ளிகளும், உயர்தொடக்கப் பள்ளிகளும் இருக்கின்றன. இவ்வாற்றால் மதுரை மாநகரம் கல்வியில் சிறந்தோங்கும் சீரிய நகராக விளங்கு கின்றது.

**இன்றைய வையை:**

இன்று வையையாறு மதுரை மாநகரத்திற்குள் வடபக்கத்தில் ஓடுகின்றது. வையைக் கரையின் இருமருங்கும் இப்பொழுது மரங்கள் செறிந்து காணப்படவில்லை. ஆயினும், பழங்காலத்தில் மரங்கள் செறிந்து நின்றமைக்கு உரிய அறிகுறிகள் ஆங்காங்குத் தென்படுகின்றன; சிற்சில இடங்களில் இளமரச் சோலைகளும் காணப் படுகின்றன. இக்காலத்தில் செயற்கை அரக்கனால் மரங்களும், பிற செடிகொடிகளும் அழிக்கப்பட்டு வருகின்றன. இவற்றின் கரைகளில் மதுரை

மாநகரைச் சார்ந்த செல்லூர்,[1] கோரிப்பாளையம்,[2] காந்திநகர், பிட்டுத்தோப்பு,[3] ஆரப்பாளையம்[4], முனிச்சாலை போன்ற ஊர்கள் காணப்படுகின்றன.

பழங்காலத்தைப் போல இப்பொழுது வையை யாற்றில் நீர் இடையருது ஓடிக்கொண்டிருக்க வில்லை. அண்மைக் காலம்வரை அது பெரும்பாலும் வறண்டே கிடந்தது. அணிமையில் 'வைகை அணைக்கட்டு' என்னும் பெயரால் ஓர் அணைக்கட்டு வைகையில் கட்டப்பெற்றுள்ளது. அதன் பயனுக இந்நாளில் ஓரளவேனும் ஆற்றில் வெள்ளம் ஓடிக் கொண்டிருக்கின்றது. எனினும், சில சமயங்களில் வெள்ளம் இல்லாது வறண்டு கிடக்கும்.

ஆற்றின் கரைகளிலும் ஆற்றின் உள்ளும் சில மண்டபங்கள் அமைந்திருக்கின்றன. ஆற்றின் கரைகளில் பல படித்துறைகளும் காணப்படுகின் றன. பண்டை நாளில் சிறப்புற்று ஓங்கிய திருமருத முன்றுறை எங்கு இருந்தது என்பது இந்நாளில் அறிதற்கு அரிதாயுள்ளது.* பழங்காலத்தில் ஓடங்

1. செல்லூர் கிழார் மகனர் பெரும் பூதங் கொற்றனர் என்னும் புலவர் இவ்வூரினராகலாம் என்று தோற்று கின்றது.
2. முகமது கோரியின் படைகள் தங்கியிருந்த இடம் என்று கூறுகின்றனர்.
3. இங்குப் பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலைக் குறிக்கும் விழா நடைபெறுவது உண்டு.
4. ஆர்க்காட்டு நவாபுவின் படைகள் தங்கியதால், இப் பெயர் பெற்றது என்பர்.

* இன்று காணப்படும் பேச்சியம்மன் படித்துறையாக இருக்குமோ என்பது ஆராய்தற்குரியது.

களும் பிறவும் சென்றுவந்த துறைகளையும் இன்று காண்பது அருமையாகிவிட்டது.

மதுரையில் நிகழும் விழாக்களில் சிறப்பு வாய்ந்தது சித்திரைத் திருவிழாவாகும். இத்திரு விழாவின்போது, ஒன்பதாம்நாட் காலையில் சோலை மலைக் கரசராகிய அழகர் ஆற்றில் இறங்குவார். அன்றுள்ள விழா நிகழ்ச்சிகள் அனைத்தும் ஆற்றில் நடைபெற்றவண்ணம் இருக்கும். அன்று சிறந்த நீர்விழா நிகழ்வதுபோன்று ஆருனது பொலிவு பெற்றுத் தோன்றும்.

வையையில் யானைக்கல் என்னும் இடத்தில் அமைந்துள்ள பழைய பாலம் 1889இல் கட்டப் பெற்றது. இப்பொழுது அது புதுப்பிக்கப் பெற்றுள்ளது. அப்பாலத்தின் அருகில் அமைந்துள்ள நடைபாதை (Cause Way) 1885ஆம் ஆண்டில் அமைக்கப்பெற்றது. இவ்யாற்றில் 1892இல் தொடங்கி 1894இல் முடிக்கப்பெற்ற திட்டமே தமிழ்நாட்டு அரசாங்கத்தால் மேற்கொள்ளப் பெற்ற முதல் நீர்ப்பாசனத் திட்டமாகும். இவ் யாற்றில் ஆரப்பாளையம் என்னும் இடத்திற்கு அருகில் காமராசர் பாலம் என்று ஒரு பெரிய பாலம் இப்பொழுது அமைக்கப் பெற்றுளது. வையை யாற்றிலே உரோமநாட்டு நாணயங்களும், பழங் காலக் கிணற்று உறைகளும், சில படிமங்களும் கண்டெடுக்கப் பெற்றுள்ளன.

முடிப்புரை :

மதுரை மாநகர் எந்நாளும் இன்பப் பொலிவோடு விளங்குகின்ற திருநகராகவே காட்சியளிக்கும். இந்நகரில் எப்பொழுதும் திருவிழாக்கள் நிகழ்ந்தவண்ணமே இருக்கும். ஆதலின், இது திருவிழா நகர் (City of festivals) என்றும் கூறப்படும். இந்நகரில் ஆர்வி பஞ்சாலை, மீனாட்சி பஞ்சாலை போன்ற ஆலைகள் உள்ளன; டி. வி. எஸ். நிறுவனம் நன்கு செயல்பட்டு வருகின்றது; வேறு பல தொழில் நிறுவனங்களும் காணப்பெறுகின்றன கீழமாசி வீதி கூலக்கடைத் தெருவாகக் காட்சி வழங்கும். ஆயினும், அது தொழிலின் பெருக்கத்தை நன்கு காட்டவல்லது.

மதுரை மாநகரம் சமயப் பொறுமையிலும் சிறந்து விளங்குகின்றது. இங்கு இந்துக்கள், கிறித்தவர், முகமதியர் ஆகிய பல சமயத்தவரும் ஒற்றுமையோடு வாழ்ந்து வருகின்றனர். இங்ஙனம் இன்றைய மதுரை மாநகரமும் பல்லாற்றானும் சிறந்தோங்கிப் புகழோடு விளங்குகின்றது. பண்டைப் பழம் பெருமையோடு இன்றும் பெருமையிற் சிறந்தோங்கும் மதுரை மூதூர், என்றும் ஓங்கி உயர்வதாக!



---

